மேல் நிலை

# சமூக, ஒழுக்கக் கல்வி

இரண்டாம் ஆண்டு



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# சமூக, ஒழுக்கக் கல்வி

மேல் நிலை - இரண்டாம் ஆண்டு



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை

முதல் பதிப்பு — 1979

**பதிப்பாசிரியர் குழுத்தலைவர் :**

சுவாமி அமிர்தானந்தா,
செயலாளர் முகவர்,
இராமகிருஷ்ணா மிஷன் விவேகானந்தர் கல்லூரி,
சென்னை-600 004

**ஆசிரியர் :**

பேரா. எஸ். இராஜகோபால சாஸ்திரி, எம்.ஏ., எம். லிட்., [எல்.டி.,
ஓய்வுபெற்ற பேராசிரியர்,
41, ஸ்டேட் பாங்குக் காலனி, மேற்குத் தாம்பரம்,
சென்னை-600 045

**மொழிபெயர்ப்பாளர் — மதிப்புரையாளர்கள் :**

திரு. டி. இ. சந்தானம்,
தலைமையாசிரியர், ஸ்ரீ இராமகிருஷ்ணா மிஷன்
வித்தியாலயா ஆண்கள் உயர்நிலைப் பள்ளி,
செங்கற்பட்டு.

திரு. தணிகை உலகநாதன்,
தமிழாசிரியர் (முதனிலை),
இந்து தியாலாஜிக்கல் உயர்நிலைப் பள்ளி,
சென்னை-600 001

**மதிப்புரையாளர்கள் :**

டாக்டர் எச். முக. முகைதீன், எம்.ஏ.,பி.எச்.டி.,
முதல்வர் — விலங்கியல் துறை முதன்மைப் பேராசிரியர்,
புதுக்கல்லூரி, சென்னை-600 014

தவத்திரு. மச்சாது அடிகளார்,
தூய யோசேப்பு கத்தோலிக்கத் தேவாலயம்,
வேப்பேரி, சென்னை-600 007

திரு. ஃபிராங்கு துரைசுவாமி,
தலைமையாசிரியர், வெஸ்லி மேல் நிலைப் பள்ளி,
சென்னை-600 014

**விலை : ரூ. 1 - 00**

[இந்நூல் இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி. எஸ். எம். தாளில் அச்சிடப்பட்டுள்ளது.]

**அச்சிட்டோர் :**
**லலிதா பப்ளிகேஷன் அண்டு பிரஸ், சென்னை-600 084**

# பொருளடக்கம்

## பகுதி — 1



## பகுதி — 2

# பகுதி 1

## 1. சமுதாயச் சூழ்நிலை

### சட்ட விதிகளின் இன்றியமையாமை

சட்ட விதிகளின் அவசியம் என்ன என்பதை அறிந்து கொள்ளும் முன்னர்ச் சட்டம் என்ற சொல் எதைக் குறிக்கிறது என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். இது எளிதில் அறிந்து கொள்ள முடியாத தெளிவற்ற ஒரு சொல். மேலும் என்றும், பலராலும் பல பொருள்களில் பயன்படுத்தப்படும் சொல்லாகும். இவ்வாறு நாம் இயற்கையின் விதி, சமுதாய விதி, ஒழுக்க விதி அல்லது அரசின் விதி என்று பல கொண்டுள்ளோம். விரிவாகச் சொல்லும் இடத்து இச்சொல் ஒருவிதமான பொதுப் படையான கருத்தைக் குறிக்கும். வேறுவிதமாகக் கூறப்போனால் எப்பொழுதும் உண்மை என்று கருதப்படும் பொதுவான அல்லது எக்காலத்திற்கும் பொருத்தமான கருத்தே ஆகும். இது மெய் யானது அல்லது உண்மையானது; உண்மையான சூழ்நிலைக்கு பொருத்தமானதாகும்.

நமது உற்று நோக்குதலின் அடிப்படையாக அமைந்த பொதுப்படையான கருத்தே இயற்கையின் விதியாகும் ; அல்லது ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியின் காரண - காரியத் தொடர்பினைப் பற்றிய ஆய்வாகும். இவ்வாறாக, ஒரு பொருளை நாம் வெப்பப் படுத்தினால், அது தன் பருமனளவில் விரிவடைகிறது, அல்லது பெருக்கமடைகிறது. இந்த இயற்கை விதி எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும் உண்மையானதொன்று. இயற்கையின் விதிக்குப் புவிக்கவர்ச்சி விதியும் மற்றோர் எடுத்துக்காட்டு. இவை மாறாதவை, எப்பொழுதும் நிலைத்திருப்பவை; மீறமுடியாதவை; மறக்கமுடியாதவை.

ஆனால், ஒழுக்க அல்லது நீதி சம்பந்தப்பட்டவிதி என்பது செய்ய வேண்டியவை எவை, செய்யக் கூடாதவை எவை எனக்கூறும் கட்டளை. ஒருவன் மற்றொருவரைக் கொலை செய்யக் கூடாது, திருடக்கூடாது போன்றவை இவற்றுக்கு எடுத்துக் காட்டுக்கள். இயற்கையின் விதியை மீறுவது நம்மால் இயலாத தாக இருக்கின்ற நேரத்தில் ஒழுக்கக் கட்டளைகளை பின்பற்றா

மலும் இருக்கின்றோம். இவ்வாறு ஒழுக்கத்தை மீறுகின்ற செயல் ஏதேனும் பின்விளைவைத் தருமா என்பதைக் காலம் மட்டுமே காட்டமுடியும்.

அரசினால் செயல்படுத்தப்படும் சட்டங்கள் அரசியல் சட்டங்கள் என்று அழைக்கப்படுகின்றன. அவை மீறப்படும்போது அதற்குரிய தண்டனைகள் தொடர்கின்றன. இச்சட்டங்கள் மக்களின் பிரதிநிதிகளாலோ, அல்லது ஆட்சி உரிமை பெற்ற உயர் அதிகாரியாலோ இயற்றப்படுகின்றன. இவ் உயர் அதிகாரி இவ் விதியினை அமுல்படுத்த அதிகாரம் உடையவர் ஆகிறார். இச் சட்டங்கள் காலத்திற்குக் காலம் மாறுபடத்தக்கவை. இந்த நடத்தை சம்பந்தமான விதிகள் அரசில் உள்ள அனைத்து உறுப்பினருக்கும் பொருத்தமானவை. ஜனாதிபதி வில்சன் சட்டத்தை இவ்வாறு வரையறுக்கிறார். "அரசின் அதிகாரத்தாலும், அதிகாரிகளாலும் ஏற்படுத்தப்பட்ட சீரான சட்டதிட்டங்களின் இருவில், முறையான அங்கீகாரம் பெற்றுள்ள மனித இனத்தின் பழக்கங்களின் — சிந்தனைகளின் ஒரு பகுதியே சட்டம்". அரசின் சட்டங்களைப் பற்றிய புரியாத புதிர்கள் ஏதும் இல்லை. ஏனென்றால், அவை முக்கியத்துவம் பெற்ற நிலைப்படுத்தப்பட்டனவும், அங்கீகாரம் பெற்றவுமான நடத்தை விதிகளைக் குறிக்கின்றன. இரண்டாவதாக இச்சட்டங்கள் அரசின் அதிகாரத்தாலும் அதிகாரிகளாலும் செயல்படுத்தப்படுகின்றன என்பதை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். கீழே குறிக்கப்பட்ட சுட்டுப் பொருள்கள் மாறுதலையாக அமைகின்றன. இவ்விதிகள் அரசினுடைய மொத்தக் குடிமக்களின் நலனைப்பற்றிய திட்டமான குறிக்கோளை நிறைவேற்றுவன ஆகும்.

மக்கள் திறமையான நிர்வாகமும் கட்டுப்பாடும் இல்லாத போது எப்படி நடத்தப்படுகிறார்கள் என்பதை நோக்கும்போது இவ்விதிகளுடைய மேலான முக்கியத்துவம் தெளிவாகிறது. வலிமையுள்ள மக்கள் தங்களின் ஆதிக்க சக்தியால் எளியவர்களைச் சுரண்டி தங்கள் நலனையே கவனிப்பதோடு நிரந்தரமாக இருக்கும் 'வலிமையே வெல்லும்' என்ற கொள்கையையும் நிலைப்படுத்துகிறார்கள். குழப்ப ஆட்சி, தெளிவற்றநிலை, போர் முதலியவை வரலாம். அந்நிலையில் எந்தச் சமுதாயமும் வளம் பெற முடியாது. ரூசோ தம்முடைய 'சமுதாய ஒப்பந்தம்' என்ற நூலில் இச்சந்தர்ப்பத்தை வைத்து ஒவ்வொருவரும் தன்னுடைய கட்டுப்படுத்த முடியாத தனி மனித சுதந்தரத்தை ஒருசில நன்மைக்காக சரண் அடையச் செய்கிறார். இந்த நன்மைகளாவன. குடி உரிமையும், தன் உடமைகளுக்கு உரியவனாயிருத்தலாகும். ரூசோ

எழுதிய 'சமுதாய ஒப்பந்தம்' என்பது ஒரு கற்பனைக் கதை. சரித்திரபூர்வமான உண்மை அன்று. ஆனால், அது பகுத்தறிவானதும், அடிப்படையுமான சமுதாய வாழ்வைத் தருகின்ற தேவையான நிபந்தனைகளை அல்லது தக்க சூழலைக் கூறுவதாகும்.

அரசு சட்டங்களின் மூலத்தையோ, அல்லது எது முடிவான அதிகாரமாக உள்ளதோ, அந்த ராஜரிகமான அரசின் தன்மையோ பற்றி இங்கு நாம் விவாதிப்பது பொருத்தமானதன்று. நமது குற்றவியல் சாராதனவும் சார்ந்தனவுமான நடைமுறை விதிகள் சமய இணக்கத்தின் அடிப்படையில் அமைந்தவையல்ல. உள்ளார்ந்து எழும் ஒழுக்கம், எல்லாரும் சமம் என்ற நிலை ஆகியவை நமது நாட்டின் சட்டங்களின் அடிப்படையாகும். நமது இத்தகைய அரசின் சட்டங்களுக்கு உள்ளார்ந்த ஊகம் அல்லது கொள்கை சமுதாயத்தின் பல்வேறு நிலைகளில் உள்ள அனைவரின் நல்வாழ்விற்காக உள்ளது. மேலும் அவரின் உள்ளார்ந்த அறிவும், மனநிலையும் ஒரே சீராக ஒருமித்து வளர்ந்து, முதிர்வடைந்து மலர்வதற்காகவும் உள்ளது. இந்த அடிப்படை நோக்கம் அல்லது தத்துவம் சட்டவிதிகள் என்பவை எதற்காக இருக்க வேண்டும், அவைகளுக்கு ஏன் குடிமக்கள் கீழ்ப்படிவது கடைமையாகின்றது போன்ற கேள்விகளுக்கு விடைதர நமக்கு உதவுகிறது. தனிநிலைத்துவம் என்றழைக்கப் படும் அரசியல் தத்துவ எண்ணம்கொண்ட ஒரு பகுதியினரின் எண்ணப்படி, சட்டங்களுக்குப் பணிவது மூலம் நமது 'தான்' என்னும் தனித் தன்மைக்கு மட்டுமே நாம் பணிகிறோம் என்பதாகிறது. ஆயின், நாம் சமுதாயத்துடன் இணைந்த ஒரு பகுதியே ஆவோம். பொதுவான விருப்பம் என்பது தான் என்னும் தனித் தன்மை நிலையே ஆகும். ஆனால், இது ஒரு தீவிரமான கருத்தாக — நோக்காக உள்ளது. எனவே தற்கால அரசியல் கூட்டுச் சூழல்களுடன் முரண்படுகிறது; மோதுகிறது. சட்டங்கள் நீதி சார்ந்தவையா அல்லவையா என்ற உண்மைகளினின்று அப்பால் நின்று, சட்டம் என்பது, சட்டத்திற்குப் பணியும் குடிமக்கள் அடங்கிய ஒரு சமுதாயத்தில் அதிக அளவில் ஒருமித்திருக்கும் ஒன்றாகிறது. அரிஸ்டாடில் சட்டத்தின் உயர்தன்மையை, நல்ல அரசின் தகுதி அல்லது குறியீடு என்று ஒப்புக் கொள்கிறார். ''மனிதன், முழுமைப்படுத்தப்படும் போது, உயிரினங்களுள் தலையானவனாகவும், சட்டம், நீதிமுதலியவைகளினின்று பிரிக்கப் படும்போது, எல்லாவற்றையும்விட மிகக் கீழான, கெட்டவனாகவும் ஆகிறான்'' என்று அவர் தமது 'பாலிடிக்ஸ்' என்று நூலில் குறிப்பிடுகிறார். ஆனால், இச்சந்தர்ப்பத்தில், எல்லா மனிதர்களும்

நல்லவர்களாகவும், சட்டங்கள் அனைத்துமே மிக நல்லவைகளா கவும் உள்ள ஒரு குறிக்கோள் நிலையான அரசாங்கத்தை நாம் ஆராயாமலே ஏற்றுக் கொண்டுள்ளோம் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். அதில் உண்மையான நடைமுறை அரசிற்கும், குறிக்கோள் நிலையான அரசிற்கும், குடிமக்களுக்கு மிடையே ஏராளமான முரண்பாடுகள் உள்ளன.

## 2. சத்தியாக்கிரகத்தின் கோட்பாடு — அதன் முக்கியத்துவமும் பொருத்தமும்

சமுதாயத்தின் சட்ட விதிகளும், முடிவான மகிழ்ச்சியும் உண்மையைவிட மிகவும் குறிக்கோள் நிலையிலேயே உள்ளன. உண்மையாகவே இத்தகைய ஜனநாயக அரசின் செயல் முறை யைக் காண்பது மிகவும் கடினமானதே ஆகும். எது அங்கத்தினர் களால் உருவாக்கப்படுகிறதாகப் பொருள் கொள்ளப்படுகிறதோ, அவ்வரசு, பலமுறைகள் மக்களின் பொது விருப்புக்களுக்கு பதிலளிக்கும் வகையில் இல்லாதிருப்பதாகவும், உண்மையாகவே மக்களுடைய நலனுக் கெதிராக அமையும் சட்டங்களை ஏற்படுத்து வதாகவும் அமைந்து வருகிறது. அல்லது மக்களின் ஆட்சியாக அமைவதில்லை. சில இடங்களில் அந்நாட்டின் அரசு, மக்களுக் காக, மக்களால் நீதிக்கு ஒவ்வாத வரி விதிக்கும் முறைகள் மக்களுக்கு எதிராகவோ அல்லது சில குறிப்பிட்ட பகுதியினருக்கு எதிராகவோ அமுல் படுத்தப்படலாம். அரசாங்கமே மக்களின் ஒரு பகுதியினரை ஒடுக்குவதற்காகத் திட்டமிட்ட நடவடிக்கைகளை ஏற்படுத்தலாம். இச்சந்தர்ப்பத்தில் ஹிட்லரால் யூதர்களை ஜெர்மனி யிலும், ஐரோப்பாவிலும் ஒடுக்குவதற்கும் பத்தில் ஒன்றாகக் குறைப் பதற்கும் எடுக்கப்பட்ட முயற்சிகளை இங்கே குறிப்பிடலாம். அரசின் இத்தகைய அடக்கு முறைகள் வெளிப்படையாகத் தெரியா மல் நுணுக்கமாக இருக்கும். ஆங்கில அரசாங்கம் சட்டம், ஒழுங்கு ஆகியவற்றை நல்ல முறையில் பேணி வந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால், அவர்களுடைய முழு நலனுக்காக எவ்வளவு முடியுமோ அவ்வளவு இந்தியாவின் செல்வங்களையும் வளத்தையும் சுரண்டுவதே அவர்களின் இறுதி நோக்கமாகும். இத்தகைய நிகழ்ச்சிகளுக்குத் தீர்வு தான் என்ன? சட்டங்கள் மக்களுடைய மேலான நலனுக்காக உள்ளன என்ற அடிப்படை மூதுரை பொய்யுரையாகவே அமைகிறது.

'சத்தியாக்கிரகம்' என்ற சொல்லைக் காந்தியடிகள் உருவாக் கினார். எந்த இயக்கம் ஆங்கில அரசுக்கு எதிராக செயல் படுத்தப்பட்டதோ அதுவே, சத்தியாக்கிரகம் என்று விவாதிக்கப்

பட்டது. சத்தியாக்கிரக இயக்கத்துடன் தொடர்பு கொண்டுள்ள மிகக் குறிப்பிடத்தக்க ஒரு நிகழ்ச்சி அவருடைய உப்புச் சத்தியா கிரகம் ஆகும். எந்தத் தனி மனிதனும் கடலிலிருந்து உப்பைச் சேகரிக்கக் கூடாது என்ற சட்டத்தை மீறுவதற்கு ஏராளமான தம் ஆதரவாளர்களுடன் காந்திஜி தண்டிக்குப் பயணம் செய்து உப்புச் சட்டத்தை மீறினார். இதுபடிப்படியாக ஒரு பெரிய குற்ற மாக உருவெடுத்தது. அவ்வப்பொழுது பல குறைகள் இருந்த போதிலும், அரசாங்கத்தினால் துப்பாக்கிச் சூடு இருந்த போதிலும் இறுதியில் ஆங்கிலேயரை இந்தியாவைவிட்டு வெளியேறச் செய் வதில் வெற்றி கிடைத்தது. எதை இந்தியத் தந்தை நாட்டு மக்களுக்குக் கொடுத்துச் சென்றாரோ அந்தச் சத்தியாக்கிரக இயக் கத்தின் முக்கியமான பண்புகளைக் குறிப்பிடுவது போற்றத் தக்க தாகும். காந்திஜி அஹிம்சை, உண்மை போன்ற நற்குணங் களைப் போதித்தார். அஹிம்சையும் உண்மையும் ஒன்றிலிருந்து மற்றொன்று பிரிக்க முடியாதபடி பின்னிப் பிணைந்துள்ளது என்று அவர் ஒருமுறை எழுதினார். அவை நாணயத்தின் இருபக்கங்கள் போல் உள்ளன. அதன் தலைப்பக்கம் எது மறுபுறம் எது என்று யார் சொல்லமுடியும்? எது எப்படி ஆயினும் அஹிம்சை என்பது வழி ஆகவும் உண்மை என்பது முடிவாகவும் உள்ளன. சத்தியாக்கிரகம் என்ற பதம் 'உண்மையைப்பற்றி இரு' என்பதையே குறிக்கும். எதிரியின்மேலோ அல்லது தன்மையிலோ துன்பங்களை சுமத்தாமல் உண்மையை நிலை நாட்டுதல் ஆகும். இது ஒரு தனித்த ஒழுக்க நெறியுடைய இயக்கம். இவ்வியக்கத்திற்குத் தன்னைத் தகுதி உடையவராக்க யார் விரும்புகிறாரோ, அவர் கீழ்க்கண்ட நிபந்தனைகளை நிறைவு செய்தல் வேண்டும். அவருக்கு இறைவனிடத்தில் நம்பிக்கை இருத்தல் வேண்டும். இறுதியில் 'வாய்மையே வெல்லும்' என்பதையும் உணரவேண்டும். அவருக்கு முடிவில்லாப் பொறுமையும் இருக்க வேண்டும். அத்துடன் துயரங்கள் பெருகி வந்தாலும், தொடர்ந்து வந்தாலும் அவர் வெறுப்புணர்ச்சியோ அதிருப்தியோ கொள்ளக்கூடாது. இறப் பைச் சந்திக்க வேண்டிய இக்கட்டு ஏற்பட்டாலும், அதை மகிழ்ச்சியுடன் எதிர்நோக்கத் தயாராக இருக்க வேண்டும். அவர் தம்முடைய உடமைகள், செல்வம், குடும்பம், ஆகிய அனைத் தையும் தியாகம் செய்யும் திறமை உடையவர்களாக இருக்க வேண்டும். அதே நேரத்தில் அவர்கள் அச்சமில்லாமல் இருக்க வேண்டும். கடவுளுக்கு மட்டுமே பயப்படுகிறவராக இருக்க வேண்டும். உண்மையிலிருந்து எப்பொழுதும் பிறழாதவராக இருக்க வேண்டும். மேலும் நற்செயல்களிலிருந்து எள்ளளவும் தவறாமல் இருக்க வேண்டும். தம்முடைய விரோதிக்கு ஏற்படும் தனிப்பட்ட வெற்றியாக இருந்தாலும் தம்முடைய கௌரவத்திற்கு

இழப்பாக இருந்த போதிலும் ஒரு வரையரைக்குட்படத் தயாராக அவர் இருக்க வேண்டும்.

காந்திஜி சத்தியாக்கிரகம் பல கிளைகளைப் பெற்றுள்ளது, அவற்றில் ஒன்றே வன்முறையற்ற ஒத்துழையாமை என்று கூறு கிறார். இதில் எது தவறானதாக உள்ளதோ அத்துடன் ஒருவன் தன்னைத் தொடர்புபடுத்திக் கொள்ள மறுக்கிறான். நல்லவை களுக்கு ஒத்துழைப்பு, மிகவும் அவசியமாக இருப்பது போலத் தீமைகளுடன் ஒத்துழைக்காமல் இருப்பதும் அவசியம் ஆகும். சட்ட மறுப்பு என்பது இரண்டாவது படிவம். இது ஒத்துழை யாமை இயக்கத்தின் முன்னேறிய ஒரு நிலை. இங்கு நல்லாட்சி அற்ற அரசின் விதிகளுக்கு ஒருவன் கீழ்ப்படிய மறுக்கிறான்; இறுதியில் வரி கொடுக்கவும் மறுக்கிறான். ஆனால், இது வன் முறை இன்மையை அடிப்படையாகக் கொண்டது. ஆனால், இத்தகைய அனைத்துச் செயல்களிலும் எதிரியிடம் தனிப்பட்ட முறையிலான வெறுப்பு இருப்பதில்லை. இவ்வாறு காந்தி யடிகள் தாம் ஆங்கிலேயருடைய நல்லாட்சி அற்ற அரசாங் கத்தை வெறுத்ததாகவும், ஆனால், ஆங்கிலேயரிடம் அன்பு உள்ளவர்களாக இருப்பதாகவும் கூறினார். இதுவே, காந்திஜியின் சத்தியாக்கிரகம், வன்முறையற்ற ஒத்துழை யாமை ஆகிய செய்தி ஆகும். அந்த மகாத்மா பொறுப்பற்ற தன்மையிலோ விளையாட்டுத்தனமாகவோ இந்த இயக்கங்களைச் செயற்படுத்துவதற்கு எதிராகத் தம்முடைய ஆதரவாளர்களை எச்சரித்துள்ளார். மக்களுக்கு இழைக்கப்பட்ட அநீதி மிக அதிக மானதாகவும், அதை நீக்கப் பலவிதமான வழிகளை முயன்று பார்த்து அவற்றில் தோல்விகண்ட பின்னரே, மக்கள் ஒத்துழை யாமை இயக்கத்திற்கு அழைக்கப்பட வேண்டும். காந்திஜியினு டைய இவ் எதிர்ப்புமுறை இந்தியாவுடன் மட்டும் நின்று வருவதே யில்லை. அவர் தமது 'யங் இந்தியா' என்னும் நூலில் "நான் என்னுடைய இச்செய்தி உலக மக்கள் அனைவருக்குமே பொது வானதென்று நம்புகிறேன். ஆனாலும் இதுவரை, என்னுடைய செயல் மூலமாக என் நாட்டிற்கு நல்ல முறையில் இதை அளிக்க முடியும்", என்று எழுதியுள்ளார்.

## சாக்ரடீஸ் எப்படித் தன் வாழ்வை முன்மாதிரியாக்கினார் ?

சாக்ரடீஸ் தத்துவ வரலாற்றில் ஒரு தனிப்பட்டவராக விளங் கினார். அவர் எதையும் எழுதாவிட்டாலும், உண்மையான சிந்தனையாளர், தம் சீடர் பிளேட்டோவின் மூலமாக மேனாட்டுத் தத்துவ வளர்ச்சியின் பாதையில் பெரியதொரு மாறுதலை ஏற்படுத்தினார். இங்கு அவருடைய தத்துவார்த்தப் பெருமை

களைக் குறிப்பிடுவது தேவையற்ற தொன்றாகும். கி.மு. 469-ல் அவர் ஏதென்ஸ் நாட்டில் பிறந்தார். மனிதர்களை மிகவும் தாக்கிப் பேசாதிருந்த போதிலும், சாக்ரடீஸ் கபடத் தனத்தை வெறுத்தார். அத்துடன் தமது காலத்தில் வாழ்ந்தவர்களின் அறியாமையை வெளிப்படுத்துவதில் பேரார்வம் கொண்டிருந்தார். இது அவருக்கு பல விரோதிகளை ஏற்படுத்தியது. அவர் சுய — கட்டுப்பாட்டிற்குப் பெயர் பெற்றவர். அவர்கள் நடத்தையின் மூலம் அவர் யதார்த்தக்கருத்துக்கும் முன்மாதிரியாக்கிக் கொண்டார். உயர்ந்த சிக்கனத்தையுடையவர் ; பெரு முயற்சியுடையவர். அவருடைய தேவைகள் மிகக் குறைவு. தம் எழுபதாண்டு வாழ்க்கையில் அவர் போரிலும், அரசியல் கடமைகளைச் செய்வதிலும் காட்டிய உடல் வலிமையிலும் உள்ள உறுதியிலும் நல்ல எடுத்துக் காட்டாக விளங்கினார். அவர் இளைஞர்களின் உள்ளத்தைக் கெடுத்ததாகவும் நாத்திகவாதத்தைப் பரப்பியதாகவும் அவரது இனத்தவர்களே பொய்க்குற்றம் சாட்டினர் அவர் விஷம் அருந்தி இறக்குமாறு தீர்ப்புக் கூறப்பட்டது. அவர் விசாரணையின்போது ஒழுக்கத்தின் அந்தஸ்துடனும் உறுதியுடனும் மாறா நிலையுடனும், கவர்ச்சித் தன்மையுடனும் இருந்தார். அவர் சட்ட திட்டங்களுக்குக் கீழ்ப் படிதலின் மூலம் நாட்டில் நாட்டிடம் தமக்குள்ள விசுவாசத்தையும் அதிகாரத்திற்கு மதிப்பளிக்கும் தன்மையையும் நிலைநாட்டினார். அவருக்குத் தண்டனை அளிக்கப்பட்ட பிறகு அவருடைய நண்பர்கள் அவரைத் தப்புவிக்கத் திட்டம் தீட்டியபொழுது தம்மைப் போல் வயதானவன் சட்டங்களுக்குப் பணியாதிருக்கக்கூடாது என்ற காரணததிற்காக அந்தப் பலனைப் பெற மறுத்துவிட்டார். அவர் கி.மு 399-ல் இறந்தார். காந்தியடிகளால் வரையறுக்கப்பட்ட தகுதிகள் அனைத்துயுமே சாக்ரடீசிடம் நாம் காண்கிறோம். சாக்ரடீஸ் அரசின் சட்ட திட்டங்களுக்குக் கீழ்ப்பணியாதிருக்க மறுத்தார். அதேநேரத்தில் எதிரிகளின் நிபந்தனைகள் நியாயமற்றதாக இருந்தால் அதற்குக் கீழ்ப்படிய மாட்டார். அவர் உண்மையான 'சத்யாக்கிரகி'. அவர் தாம் உண்மை என்று கருதியதையே செய்தார் ; அவரை எது நாத்திகர் என்று பொய்யாகக் குற்றஞ் சாட்டியதோ அந்தப் பொது ஆர்பாட்டத்திற்குப் பணிய மறுத்தார். அவர் ஏதென்ஸிலிருந்து தப்பி அதன் மூலம் நாட்டின் சட்டத்தை மீறுவதற்குத் தயாராக இல்லை. அவர் பயமோ, வெறுப்போ இன்றித் தம்முடைய கடமையைச் செய்தார்.

## 3. சுதந்தரம் பற்றிய கோட்பாடு

**தொகுப்புரை :** சட்டத்தின் விதி என்ற பகுதியில் நன்கு அமைந்த வாழ்க்கையின் அடிப்படையே விதி என்று நாம் குறிப்

பிட்டுள்ளோம். சட்டங்கள் நம்மை அநீதிகளிலிருந்தும் வலியோர் களிடமிருந்தும் பாதுகாக்கிறது. இல்லையேல் அவர்கள் நம்மைச் சுரண்டுவதுடன் மோசமாக நடத்தவும் செய்வார்கள். அந்த விதிகள் அடிப்படையில் மக்களின் சந்தோஷத்தையும் நல்வாழ்வையும் நோக்கமாகக் கொண்டுள்ளன என்பது உண்மை என்பதை விட அதிகமான கற்பனையே என்று கூறலாம். ஓர் அரசு தன் ஆட்சியை நீடிக்கச் செய்வதற்காகவே, தாழ்த்தப்பட்டவர்களைப் பாதுகாப்பதையும்விட அதிகமான அக்கறையுடன் தீவிர ஒழுங்கு நடவடிக்கைகளைத் திணிக்கும் போது நாம் மேற்கொள்ளும் தீர்வு என்ன ? இதற்குரிய விடை காந்தியடிகளின் சத்தியாக்கிரக இயக்கம் என்ற பகுதியில் குறிக்கப்பட்டுள்ளது. உண்மையற்ற மக்களுக்கு இத்தகைய இயக்கங்களை நடத்துதல் என்பது இயலாத தொன்றாகும். காந்திஜியைத் தவிர வேறு யாராவது இத்தகைய இயக்கங்களை நடத்த உண்மையான தகுதியுடைய வர்களாக இருப்பார்களா என்று கேட்க, ஒருவன் தூண்டப்படலாம். சாக்ரடீஸ் தம்முடைய எளிமையுடனும், மகாத்மா காந்தியடிகளின் தகுதிகளையும் ஒருங்கிணைத்துக் கொண்டிருப்பது இத்தகைய மனிதர்கள் இருக்க முடியும் என்ற சாத்தியக்கூறுக்கு சிறந்ததொரு எடுத்துக்காட்டு.

சட்ட விதிக்கும், சுதந்தர உணர்விற்கும் இடையே உள்ள இணக்கம் என்ன என்ற கேள்வி எழலாம்.

ஒரு குறிப்பிட்ட சட்டத்திற்குக் கீழ்ப்படிவதற்கு ஒரே அளவாக நாம் ஒடுக்கப்பட்டால், அப்பொழுது நமது சுதந்தரம் சிதைக்கப் படுகிறது. நாம் அரசின் சட்டங்களுக்கு கீழ்ப்படியாதிருக்கின்ற வகையில் ஒழுங்கான, ஆரோக்கியமான வாழ்க்கை என்பது சாத்தியமாகாது. இந்த ஒடுக்கம் நம்மை கட்டுப்படவைக்கிறது. இத்தருணத்தில் நாம் சுதந்தரமாக உள்ளோம் என்று எவ்வாறு கூற முடியும் ? சுதந்தரம் என்ற பதத்திற்கான சாதாரணப் பொருள் எவ்விதத்திலும் தடை செய்யப்படாமல் ஒருவர் விரும்புகின்ற அனைத்தையும் செய்வதற்கான உரிமை என்பதாகும். இது முழுமையான சுதந்தரமாகும். ஆனால், இத்தகைய சுதந்தரம் இருக்க முடியுமா ? ஒரு கண நேரச்சிந்தனை நமக்கு நாம் இத்தகைய, முழுமையான சுதந்தரம் பெற முடியாது என்பதை உணர்த்திடும். ஏனெனில், ஒருவருடைய சுதந்தரம் மற்றவனுடைய சுதந்தரத்தினுள் தலையிடுமேயானால் அதனுடைய விளைவு குழப்பமேயாகும். நாம் விரும்புகின்ற எங்கும் நடப்பதற்கு உள்ள சுதந்தரத்தை உறுதி செய்யும் வகையில் பாதையின் நடுவில் நாம் நடந்து செல்ல முடியாது. ஒருவருடைய சுதந்தரம்,

மற்றவருடைய சுதந்தரத்தோடு இணைக்கப்பட்டிருக்க வேண்டும். இது முக்கியமான சில உரிமைகளை அனுபவிப்பதற்கான ஆர்வத்தினால் ஒருசில உரிமைகளை விட்டுக் கொடுக்க வேண்டியது என்பதைக் குறிக்கும்.

ஆனால், உண்மையில் சொல்லப் போனால் நம்முடைய சுதந்தரம் ஒடுக்கப்பட்டுள்ளது. மேலும், வாழ்வதற்கான உரிமை, சொத்துரிமை, நம்பிக்கைகொள்வதற்கான உரிமைகள் போன்ற சில அடிப்படை உரிமைகளுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. ரூஸோ தனது 'சமுதாய ஒப்பந்தம்' என்னும் நூலில் இந்தக் கருத்தை நன்கு விளக்குகிறார். அவருடைய ஒப்பந்தம் என்பது கற்பனைக் கதை என்றும், உண்மையில் எப்பொழுதும் நடைபெறவில்லை என்றும் நாம் தெரிந்து கொண்ட போதிலும் அவர் கூறுகிறார். சமூக அமைப்பு என்பது மற்றெல்லா உரிமைகளுக்கும் அடிப்படையாய் உள்ள புனிதமான ஒரு அமைப்பு. "எது பொதுவான, முழுமையான பலத்துடன் நம்மை எல்லாம் பாதுகாக்கவும், வலுப்படுத்தவும் செய்யுமோ, அந்த அமைப்போடு இந்த பிரச்சனை ஒரு வழியை உண்டாக்க வேண்டும். மனிதனும், பொருள்களும் ஒருங்கிணைகின்றன. ஒன்று எல்லாவற்றிலும் இணையும் போது தனக்குத்தானே கீழ்படியும்" என்று அவர் இந்த நூலில் எல்லா இடங்களிலும் கூறுகிறார். மேலும் முன்பிருந்ததைப் போலவே சுதந்தரமாய் இருக்கும். வேறு விதமாகச் சொல்லப் போனால் எது மக்களைத் துன்பத்திலிருந்து பாதுகாக்குமோ, அத்தகைய பொது அமைப்புக்களை உண்டாக்க எல்லா உறுப்பினர்களும் விரும்புகின்றபோது, சமுதாயம் ஒரு நிலைக்கு வருகிறது. இவ்வாறு ஒரு ஒழுங்கான முன்னேற்றத்திற்கு அழைத்துச் செல்லுகிறது. இதை அடைய ஒவ்வொரு மனிதனும், தன்னுடைய உரிமைகளை அல்லது சுதந்தரத்தைச் சரணடையச் செய்யலாம். ரூசோவும், வேறு சில சிந்தனையாளர்களும் இதற்கு ஒரு படி மேலே போய் 'எது அரசாங்கத்தின் உட்கருவாக இருக்கிறதோ அது அந்தப் பொது அமைப்பாகிறது ; சமுதாயத்தின் பொது விருப்பை பிரதிபலிக்கிறது' என்று உறுதி கூறுகிறார்கள். ஆனால், தற்காலச் சிந்தனையாளர்கள் பொது விருப்பு என்ற கொள்கையை தீவிரமாக எடுத்துக் கொள்வதில்லை.

சரித்திர பூர்வமாக எப்பொழுதுமே சமுதாய ஒப்பந்தத்திற்கு எவ்வித ஆதாரங்கள் இல்லாது இருந்தபோதிலும் எவனொருவனும் எந்தவிதக் கட்டுப்பாடும் இன்றி முழுமையான சுதந்தரத்தைச் செயல்படுத்த முடியாது என்ற அடிப்படையான கருத்தை அது விளக்குகிறது. மேலும், நமது சுதந்தரம் சில குறிப்பிட்ட எல்லை

களுக்குள் வட்டமிடப்பட்டு இருக்கின்ற பொழுதில்தான் ஒழுங்கான சமுதாய வாழ்வு சாத்தியமாகும் என்றும் விவரிக்கிறது. வெளிப்புற ஆக்கிரமிப்பு போன்ற இன்னல்கள் இருக்கின்ற வேளையில்தான் அரசு நம்மை வெளியேறும்படி கட்டுப் படுத்தலாம். நாட்டின் பாதுகாப்புக்காகச் சண்டையிடும்படி உத்தரவு இடலாம். மக்களின் நலனுக்காகச் சிறிதுகாலம் பொதுக்கூட்டங்கள் நடத்தும் உரிமைகளைத் தடை செய்யலாம். மேலும், தீவிரமான நெருக்கடி காலங்களில், குறிப்பிட்ட காலத்திற்கு நம்முடைய எல்லா உரிமைகளையும் அகற்றிவிட அரசுக்கு அதிகாரம் உண்டு. இது நம்முடைய உரிமைகளைத் தளரச் செய்ததாகக் கருதப்பட முடியாது. இங்குள்ள இடையூறு என்னவென்றால் அரசாங்கமே தங்களுடைய விருப்பு, வெறுப்பு கொண்ட மனிதர்கள் இருக்கின்ற படியால் நம்முடைய உரிமைகளைத் தடை செய்யவோ, அல்லது கட்டாயமாக நீக்கிவிடவோ செய்யக்கூடிய ஆணைகளைப் பிறப்பித்து அதனால், தங்களை பொறுப்பில் நீடித்திருக்கச் செய்ய முயற்சிப்பதேயாகும். ஆனால், உண்மையான — முழுமையான மக்களாட்சி கொண்ட அமைப்பில், மக்களின் முன்னேற்றத்தையும் சந்தோஷத்தையும் எண்ணுகின்ற அரசாங்கத்தில் இத்தகைய சுதந்தரங்களைத் தவறாகப் பயன்படுத்தப்படும் நிகழ்ச்சி நடைபெறாது.

உரிமைகள் எப்பொழுதும் கடமைகளோடு தொடர்பு படுத்தப் பட்டுள்ளன. ஒவ்வொரு உரிமையும் சமுதாயத்தினுடைய நலனிற் காக மட்டும் பயன்படுத்தப்படும் வகையில் செய்து தீரவேண்டிய தாக உள்ளது. வாக்கு நல்ல முறையில் பயன்படும்படி செய்யும் கடமை, வாக்கு அளிக்கும் உரிமையினுள் அடங்கியுள்ளது. அதேபோல் நம்நாட்டின் மூலப் பொருள்களை விவரிப்பதற்கான கருவியாக நமது சொத்து உள்ளதா என்று பார்ப்பது சொத்தைப் பெறுகின்ற உரிமை, நம்மீது கொடுக்கும் உரிமையாகும். வெளி நாட்டவரின் ஆதிக்கத்திற்கு எதிராக நாட்டைப் பாதுகாத்தல், உள் நாட்டு அமைதியை நிலைநாட்டுதல், நீதிபரிபாலனம் செய்தல், மக்களின் பொருளாதாரத் தேவைகளைப் பெற வழி வகுத்தல், கல்வி கற்பித்தல் போன்றவை அரசாங்கத்தின் முக்கிய மான வேலைகள். குடிமக்கள் இவற்றை உரிமைகள் என்று நியாயமுடன் கோரலாம். ஆனால் எல்லா மக்களுடைய மேலான தேவைகளுக்குப் பொருந்துகின்ற வகையில் அவை சரிசெய்யப்பட வேண்டும். இத்தகைய அடிப்படை உரிமைகள், நீதிமன்றங்களின் மூலமாய் ஒரு குடியாட்சியில் செயல்படுத்த முடியும் தேவையான முக்கியத்துவம் பெற்று விட்டன. இந்திய அரசியல் அமைப்பின் முன்னுரை மக்களுக்குச் சமூக, பொருளா

தார அரசியல், நீதியையும், சிந்தனை, நம்பிக்கை வெளியிடும் தன்மை, மத வழிபாடு ஆகியவற்றின் சுதந்தரத்தையும், தகுதியிலும் வாய்ப்புக்களிலும் சமநிலையையும் உறுதி செய்கிறது. அதே நேரத்தில், குடியாட்சி உள்ள நாடுகளில் அடிப்படை உரிமைகளாக இருக்கின்றபோது, சர்வாதிகார நாடுகளில் மிக அதிகமாக இவை தீவிரமாகக் கண்காணிக்கப்பட்டு வருகின்றன. இத்தகைய அரசாங்கங்கள் தங்களின் அதிகாரத்தில் முழுமை பெற்றுள்ளன. அதை உபயோகிப்பதில் வரையறையற்ற அதிகாரம் பெற்றுள்ளது. தேசீய சொத்தாயிருக்கின்ற பொருளாதார, ஒழுக்க, கலாசார மதிப்புக்கள் கட்டுப் படுத்தப்படுகின்றன ; அரசாங்கத்தால் பயன் படுத்தப்படுகின்றன. அதன் அனுமதியின்றி, எந்தவிதமான அமைப்போ, கட்சியோ, உற்பத்தியோ ஏற்பட முடியாது ; கல்வி கூட அதன் கருவியாக அமைகிறது.

இவ்வாறு சுதந்தரம் கருப் பொருளாக இருந்தாலும் உண்மையிலேயே அதன் அனுபவம் அந்நாட்டின் அரசாங்கத்தின் அமைப்பையே சார்ந்துள்ளது. அதன் மக்களின் கல்வியறிவைச் சார்ந்துள்ளது. அவர்களின் விழிப்புணர்ச்சியையும், ஒழுக்க மதிப்பையும் சார்ந்துள்ளது. ஆனால், நாம் பார்த்த வகையில் நாட்டின் அரசாங்கத்தால் தீர்மானிக்கப்பட்டிருப்பதால் சுதந்தரம் என்பது சமூக நலத்தோடு இணைந்துள்ளது.

## 4. சமூகத் திட்டங்களும், அவை பயன்படும் விதமும்

சட்டங்கள் சமுதாயத்திற்குப் பொருத்தமானவை. மேலும் நாட்டின் அரசாங்கத்தால் சமுதாயத்தின் நலனிற்காக ஏற்படுத்தப் பட்டவை. அவற்றின் வேலையாவது சமுதாயத்தின் நிலையை உயத்துவது அல்லது சட்டத்தின் சில பகுதிகளில் தரத்தை உயர்த்துதல், மேலும் சமுதாயத்தில் எவையேனும் குறைகள் அல்லது முறைகேடுகள் இருந்தால் அவற்றைத் தீர்வு செய்வது அரசின் கடமையாகும். சமுதாயத்தின் சில பகுதிகளிலோ அல்லது முழுவதையுமோ நன்னிலை அடையச் செய்வதும் நாட்டின் மூலதனத்திலும், வாய்ப்புக்களிலும் அவர்களுக்குச் சேர வேண்டிய பங்கு கிடைத்து விட்டதா என்று பார்ப்பது அரசின் முக்கியமான கடமையாகும். ஏழ்மை என்பது ஒருகால் இந்தியாவின் மிகவும் முக்கியமான பிரச்சனையாக இருக்கலாம். இது வளரும் எல்லா நாடுகளுக்கும் பொதுவாக இருப்பினும் பொது வாழ்வின் மற்ற அம்சங்களில் இதன் விளைவு அளவிடற்கரியது. இப்பிரச்சனை தீவிரமானது. நாட்டின் மக்கள் தொகையில் 60% மேல் ஏழ்மை நிலையில் வாடுகின்றார்கள் என்று சொல்வதி

லிருந்து கண்கூடாகக் காண முடிகிறது. இத்துடன் இணைந்து செல்லும் மற்றொரு பிரச்சனை வேலையில்லாத் திண்டாட்டம். கல்வியறிவு பெற்றவர்களும், ஏழ்மை நிலையில் உள்ளவர்களுமா யிருக்கின்ற நமது மக்களுடைய பொருள் சம்பாதிக்கும் திறனை உயர்த்துவது என்பதே தற்போதிருக்கும் மிக அவசரமான பிரச்சனையாகும்.

இந்தியாவில், சமுதாயப் பிரச்சனைகள் எல்லாம் ஒன்றோ டொன்று நெருக்கமாகத் தொடர்பு கொண்டுள்ளன. காரண காரியத் தொடர்புடன் செயல்படுகின்றன. ஓர் எடுத்துக்காட்டாக மக்கள் மிகவும் ஏழைகளாய் இருந்து, அவர்களுடைய பசி தீர்க்க வழி ஏதும் புலப்படாமையால் மது அருந்துகிறார்கள் என்று நாம் கூறலாம். மதுவே ஏழ்மை நிலைக்குக் காரணமாகிறது. ஏனெனில் உழைக்கும் வர்க்கத்தினர் தம் வருவாயில் அதிகமான பகுதியைக் குடிப்பதற்காகவே செலவிட்டு விடுகின்றனர். கல்வி யறிவின்மை மற்றொருவகையில் மக்களை ஏழ்மை நிலைக்கு உட்படுத்துகிறது. ஏனெனில் எவ்வகையான தேவைகள் மூலம் அதிகப் பணம் சம்பாதிக்க முடியுமோ அவ்வழிகளை அவர்கள் அறியாதவர்களாக உள்ளனர். இவை எல்லாம் சமுதாயத்தில் பெரிய அளவில் உள்ள பிரச்சனைகள் ஆகும். இவை மக்களுடன் நெருக்கமாகத் தொடர்பு படுத்தப்பட்டுள்ளன. எனவே, இப் பிரச்சனைகளுக்கு ஒன்றைத் தீர்க்க எடுக்கும் முயற்சிகள், மற்ற வற்றால் பாதிக்கப்பட்டு, அதைச் சீரான நிலைக்கோ சீர்குலை விற்கோ எடுத்துச் செல்கிறது. எனவே, இப்பிரச்சனைகளில் நாம் துணிந்து எடுக்கும் நடவடிக்கைகள் மிகவும் கடினமாகி விடுகின்றன.

மதுப் பழக்கத்திற்கு அடிமையாகும் தன்மை மக்களின் உடல் நலத்தைப் பாதிக்கும் செயலாக அமைந்து விடுகிறது. அரசாங்க விதிகளை அறியாமை, சட்ட உரிமைகளைப் பற்றிய போதிய அறிவில்லாமை ஆகியவை மேலும் சீர்குலைக்கின்றன.

வெவ்வேறு நாடுகளிலும் கையாளப்படும் தீர்வுகளின் வகையில் வேறுபாடுகள் உள்ளதால் இவற்றிற்கு வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற வகையில் தீர்வுகள் இல்லை. தேவையான அளவு தீர்க்கமான சிந்தனையுடன் கூடிய தீவிரமான எச்சரிக்கையாக, சமுதாயச் சட்டங்கள் மூலம் இப்பிரச்சனைக்குத் தீர்வு காணும் போது மேற்கொள்ள வேண்டிய அவசியமாகிறது. மேலும் சமுதாயச் சீர்கேடுகளைத் தீர்த்துவைப்பதற்கு இச்சட்டங்கள் பொருந்தாத வகையிலும் அமைந்துள்ள விநோத நிலையையும் நாம்

உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். இந்திய அரசாங்கம் ஆணின் திருமண வயதை 21 ஆகவும் பெண்ணின் திருமண வயதை 18 ஆகவும் உயர்த்திக் கொண்டு வந்துள்ள போதிலும், நடைமுறையில் அச் சட்டம் ஒரு செயலற்றதாகவே உள்ளது. இளவயதில் திருமணம் செய்விப்பதால் ஏற்படும் தீமைகளைப் பெற்றோர்களுக்கு அறிவுறுத்துவதே மிக இன்றியமை யாதது. இளமையில் மணம் செய்விப்பதால், மக்கள் தொகைப் பெருக்கம் கட்டுக்கு அடங்காததாகிறது என்ற ஒரு பொது கருத்தை பாலியத் திருமணத்திற்கு எதிராக உருவாக்க வேண்டும். சமுதாயச் சட்டங்கள், மறைமுகமாக இப்பொதுக் கருத்துக்களை அமைக்கப் பெருமளவில் உதவும். சில சமூகத்தினர் நரைத்துப் போன பழைய பழக்கங்களின் அனுமதியை எடுத்துரைக்கலாம். அது நிர்வாக எந்திரத்தின் செயல்முறையை மேலும் கடினமாக்கு கிறது. கல்வியறிவின்மையை எதிர்த்துப் போரிட, சுலபமாகக் கட் டாய ஆரம்பக் கல்விச் சட்டத்தை வலியுறுத்தலாம். மேலும், ஒவ் வொரு குழந்தையும் 8 ஆண்டுகளுக்கு மேல் இருந்தால் கட்டாய மாகக் கல்வி பெற வேண்டும் என்றும் வலியுறுத்தலாம். ஆனால், அதற்குத் தேவையானவைகளை அதிகாரிகள் அமுல் படுத்த வேண்டும். அதிலுள்ள எதிர்ப்புக்களால் ஏற்படும் இடையூறு களின் காரணமாக அவர்கள் மனம் தளரலாம். அணுக முடியாத தொலைவில் உள்ள கிராமங்களில் அல்லது சிற்றூர்களில் இளம் குழந்தைகளை அவர்களின் பெற்றோர்கள் தொழில் செய்து குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். எனவே, வேலை செய்வதன் மூலம் பொருள் சம்பாதிப்பதை விட்டுவிட்டுப் பள்ளிக்குச் சென்றால், அவர்களின் மேல் பெற்றோர்கள் ஆத்திரம் அடை கிறார்கள். எனவே அதிக எண்ணிக்கை உள்ள குழந்தைகள் சிறிது காலத்திற்குப் பின்பு பள்ளிப் படிப்பைவிட்டு நின்று விடுகிறார்கள். இவ்வாறு அவர்கள் எழுத்தறிவின்மைக்கு உட்படுத்தப்படுகிறார் கள். அரசாங்கம் போதை தரும் குடிப்பழக்கத்தால் ஏற்படும் தீமை களிலிருந்து மக்களைப் பாதுகாக்க வேண்டும் என்னும் ஆர்வத் தினால் வெளிப்படையாக விற்பதற்குத் தடை செய்கிறது. ஆனால், வெகு சீக்கிரமாக கள்ளச் சாராயம் காய்ச்சும் முறை செழிக்க ஆரம்பித்துள்ளது. அதிகாரிகள் செய்வதறியாது இருக்கின்றனர். இது கல்வியோடு மட்டுமல்லாமல் ஒரு பழக்கத்திலிருந்து மற்றொரு பழக்கத்தை மாற்றுவதுடனும் தொடர்பு கொண்டுள்ளது. அவர் இக்கொடிய பழக்கத்தை மாற்ற விரும்புவதில்லை. வேறு சிலருக்கு மதுவினால் ஏற்படும் தீய விளைவுகளைப் பற்றி அறிந் திருக்கவில்லை. மத்திய அரசு வேலையில்லாத் திண்டாட்டத்தை

அகற்றி விடும் என்று அறிவித்துள்ளது. அத்துடன் அடுத்த 10 ஆண்டுகளில் பூரண மது விலக்கு அமுல் படுத்தப்படும் என்றும் கூறியுள்ளது. நடைமுறை இன்னல்கள் எப்படியிருந்தாலும் இது ஒரு சரியான பாதையில் எடுக்கப்பட்ட சரியான முடிவாகும். இந்த கொள்கைகளை நிறைவேற்றுவதில் சில எதிர்பாராத இடையூறுகள் ஏற்படலாம் ஆனால், சட்டத்தை செயல்படுத்தும் அதிகாரிகளும் பொது மக்களும் ஒருவரோடு ஒருவர் ஒத்துழைப்பதாலும் இப்பிரச்சினைகளை ஆழ்ந்த அனுதாபத்தோடு நோக்கினால் எந்த சமுதாய பிரச்சினைகளும் தீர்க்கப் படாமல் இருக்க முடியாது. இந்த வகையில் குடிமக்களுடைய கடமை தவிர்க்கப் படமுடியாத ஒன்று. சட்டத்தைச் செயல்படுத்துகின்ற அதிகாரிகளில் ஒருவராக குடிமகன் இல்லாதிருந்த போதிலும், அந்த அதிகாரிகளோடு முடிந்த அளவு ஒத்துழைத்துச் சட்டம் ஒழுங்கை நடைமுறைப்படுத்துவதில் தன்னால் இயன்றவற்றைச் செய்ய வேண்டியது அவனுடைய கடமையாகும். எழுத்தறியாமையின் கேடுகளை மக்களுக்கு அறிவுறுத்தலும், மது அருந்துவிதால் ஏற்படும் தீமைகளை விளக்குவதும், பால்யவிவாகத்தில் உள்ள தவறுகளைச் சுட்டிக் காட்டுவதும் அவருடைய கடமையாகும். சமுதாயப் பிரச்சினைகளை இளம் வயதிலேயே குழந்தைகளுக்குக் கற்பிப்பதற்காகவும், கல்வி அறிவற்ற மக்களின் இன்னல்களைத் தீர்ப்பதற்காகவும், பள்ளிகளும், மருத்துவமனைகளும் திறக்கப்படலாம். இதைச் செய்வதற்கு முற்றிலும் ஒரு புதிய உண்மையான சமுதாய அமைப்புத் தேவை.

## 5. பொது ஒழுக்கம்

### சரியான ஒழுக்கவியல் பிரதிவினைகள்

சட்டத்தின் விதி, சமுதாயத்திற்கு உண்மையில் நன்மையாக உள்ள அது ஒரே வகையான நிர்வாகம் என்பதை நாம் பார்த்தோம். இது ஒவ்வொருவரையும் அமைதியுடன் வாழவைக்க உதவுவதுடன், அவருடைய செயல்களைத் தொடர்ந்து நிறைவேற்றவும் உதவுகிறது. எனவே, சட்டத்திற்குப் பணியவேண்டிய நிலை வற்புறுத்தப்படுகிறது. அதே சமயம், இதுவே சாதாரணமாக நல்ல வகையான நிர்வாகம் ஆகும். அரசாங்கம் சமூக விரோத நடவடிக்கைகளை மேற்கொள்ளும் போதும் மக்களை அடக்கும் போதும், அதற்கு எதிராக நாம் சில சமயங்களில் கிளர்ந்தெழுகிறோம். இதற்கு நாஜி அரசு யூதர்களைக் கொன்ற நடவடிக்கையை மேற்கோளாகக் காட்டலாம். மற்றோர் எடுத்துக்காட்டாக தெற்கு ஆப்பிரிக்கா தனது நாட்டின் ஆதிக்குடிகளான கறுப்பர்

களிடம் குரோத மனப்பான்மையுடன் நடந்து கொள்வதைக் கூறலாம். இந்த நிகழ்ச்சிகளுக்குச் சாதாரணமாகத் தீர்வு காண்பது சாத்திய மாகாதிருப்பதால், சத்தியாக்கிரஹம், ஒத்துழையாமை, சட்ட மறுப்பு போன்ற இயக்கங்களே ஒருகால் சிறந்த மாற்றுமுறை களாகும். நாட்டின் சட்டங்களும் தனிமனித சுதந்தரத்துடன் இணைக்கப்பட்டுள்ளன; தொடர்பு கொண்டுள்ளன. எவ்வாறு இவ் விரு முரண்பட்ட தத்துவங்களும் ஒன்றாக நிலைத்திருக்கின்றன என்பதை நாம் காண்கிறோம். அனைவருக்குமான பொதுக் கல்வி, முழு மதுவிலக்கு, சட்ட ஒழுங்கை நாடு முழுவதும் நிலைப்படுத்துதல், கலவரங்களையும், கிளர்ச்சிகளையும் அடக்கு தல் போன்ற முயற்சிகளுக்கு சமூக வட்டத்தில், நம் அரசின் சட்டங்கள் போதுமானவையாக இல்லை. மக்களின் சுய ஒத்துழைப்பினாலும், உதவியாலும் அரசாங்கத்தின் நோக்கங்கள் இத்துறைகளில் வலுப்படுத்தப் படவேண்டும். சட்டத்திற்குப் பணிதலால் மட்டுமே குடிமக்களின் கடமை முழுமையடைந்து விடுவதில்லை. அவர்கள் அரசின் நிர்வாகங்களின் பிரதிநிதிகளுடன் தம்மைத் தீவிரமாக இணைத்துக் கொண்டு அரசின் நல்ல திட்டங்கள் தொலைதூரங்களிலுள்ள உள்ளடங்கி இருக்கும் சிற்றூர்களுக்கும் பயன்படுகிறதா எனப் பார்க்க வேண்டும். இளைஞர்கள் ஊர்க்காவல் படையில் சேர்தல், பாதுகாப்புப் படையில் சேர்தல் போன்றவை அரசுடன் ஒத்துழைக்கும் வழிகளில் சிலவாகும். வலிய முன்வந்து செயலாற்றும் நிறுவனங்கள், அரசினை விட மிகவும் விளங்கத்தக்க வகையில் ஆரம்பக் கல்வியை பரப்பலாம்.

தாமே முன்வந்து உதவும் இத்தகைய தன்மை நீங்கலாக, நாம் ஒழுக்கக்கருத்துக்களைப் பயன்படுத்த வேண்டிய பல சமூக சூழல்களும் உள்ளன. ஒரு குறிப்பிட்ட நோக்கத்தையும் கருத்தை யும் அடிப்படையாகக் கொண்ட அமைப்பே நிறுவனம் என்பதாகும். இவை நல்ல ஆரோக்கியமான கருத்துக்களைக் கொண்டு நடைபெறுகின்றனவா என ஒருவன் கவனிக்க வேண்டும். பொருளாதார, வியாபார நிறுவனங்கள் போன்றவைகளை நாம் ஒன்று அல்லது இரண்டு எடுத்துக்காட்டுக்களாகக் கொள்ளலாம். வியாபாரிகள், உற்பத்தியாளர்கள் மற்றும் மொத்த வணிகர் சில்லறை விற்பனையாளர்கள் ஆகிய அனைவருமே இவ்வகை யில் அடங்குகின்றனர். எல்லா நாடுகளிலும், குறிப்பாக, வளர்ச்சி யடைந்துள்ள நாடுகளில் ஒரு சில வியாபார நிறுவனங்கள் குறிப் பிட்ட சில வழிகளில் ஆதிக்கம் பெற்றுள்ளதை நாம் காண்கி றோம். இந்த அம்சத்தைக் குறிப்பிட்டுக் கூறுகையில், பெரும் வியாபாரப்புள்ளிகள் தங்களைச் சாதாரண மனிதனின் நலன்

களைக் காக்கும் தர்மகர்த்தாக்களாக விளங்க வேண்டும் என் கின்றனர். அவர் ஓர் இக்கட்டான கேள்வியையும் நம்முன் வைக்கிறார். 60 சதவீதத்திற்கும் அதிகமான ஏழை மக்கள் உள்ள இந்தியா போன்ற நாடுகளில் சாதாரண மனிதர்களுக்கு இத்தகைய பொருள்களை உற்பத்தி செய்வதாலோ ஏற்றுமதி, இறக்குமதி செய்வதாலோ, அது எவ்வளவு நன்மையைத் தரும்? எந்த அளவிற்கு இப்பெரும் லாபம் ஒரு வேளை உணவிற்குத் திண்டாடும் சாதாரண மனித வாழ்வை உயர்த்தப் பயன்படும் என்கி றார். இந்த பல்வேறுபட்ட பெரிய வியாபாரப் புள்ளிகள் அவருடைய கோடிக்கணக்கான பணத்தைத் தன் சொந்த சொத்தாகக் கருதா மல், அது சாதாரண மக்களுடையதாகக் கருதும் போது, ஏழை எளியவர்களின் தர்மகர்த்தாவாக விளங்குகின்றனர். இந்தப்பணம், இல்லாதவர்களின் உண்மையான பயன்களுக்காகப் பயன்படுமாறு வைக்கப்பட நன்னெறி முறை தேவைப்படுகிறது. இல்லையேல் வியாபாரம், வர்த்தகம் ஆகியவை ஒரு சூதாட்டமாகவும், நன் னெறியற்றதாகவும் இருக்கும். பொருளையோ பணத்தையோ அதிகமாகத் தேக்கி வைத்திருப்பவன் தங்களுடைய அடிப்படைத் தேவைகளைக்கூடப் பெறாதவர்களைப் பட்டினிக்குள்ளாக்கு கிறார், என்று காந்தியடிகள் விளக்கிக் கூறியுள்ளார்.

இந்த தர்மகர்த்தாக் கொள்கையுடன் நெருங்கிய தொடர்பு தனது பகட்டைக் காட்டும் விதத்தில் ஊதாரித்தனமாக செலவுசெய் தல் போன்றவை திருடுவதற்கான குற்றம் எனக் கூறும் கொள்கை யாகும். வீணாக்குதல், ஊதாரித்தனம், ஒருவனது செல்வத்தை மற்றவர்களுக்குக் காட்டும் விதத்தில் களிப்படைதல் போன்றவை திருட்டைப் போன்ற மோசமானவை. ஏனெனில் அச்செலவு தனிப்பட்டதாகவோ அல்லது பொதுவானதாகவோ இருந்தாலும் அது குறிப்பிட்ட அளவில் எவ்வித நன்மையும் ஏற்படுத்தாமல் செலவு செய்யப்படவேண்டும் என்பதற்காகவே செய்யப்படுகிற தென்றும் அதைக் காந்தியடிகள் பாவம் என்றும் கூறுகிறார். ஒருவன் தன் வாழ்க்கைத் தேவைகளை மறுப்பதற்க இல்லாது, சிக்கனமாகக் செலவு செய்ய வேண்டும். காந்தியடிகள் குரல் இதைப் பொறுத்தவரை, பொருத்தமான நேரத்தில் ஒலிக் கிறது. இதை மதிக்காமல் நடக்கின்ற மனிதர்கள் தங்களுடைய அழிவை நோக்கிச் செல்கின்றனர்.

# பகுதி 2

## 1. சமய ஈடுபாட்டின் பின்னணிச் சூழல்

மனித இனம் தானாகவே உருவாக்கப்படும் மூலக்கூறுகளின் அடிப்படையில் ஒரு சமுதாயமாக மாற்றவோ அல்லது உருவாக்கவோ படுகிறது என்று முன்பே கூறியுள்ளோம். மனிதன் ஒரு கூடி வாழும் பண்புடைய உயிரினமாவான். அவனால் தானாகவே நீண்டகாலமாக தனித்து வாழவும் முடியாது. எனவே அவன் பிறருடன் கூடிவாழ வேண்டிய நிலைமை பெற்றுள்ளான். இத்தகைய கூட்டு வாழ்க்கை முறையில் சில பொதுப் பண்புகள் அடிப்படையாக அமைகின்றன. ஒரேமொழி, ஒரே குடும்பத்தைச் சார்ந்திருத்தல் போன்றவை தேவையான தன்மைகளாகும். பின்பு நாடு தன் அரசாங்கத்தின் மூலமாக இதில் தலையிட்டு சமுதாயத்தின் உள்ளும் புறமும் உள்ள துன்பங்களிலிருந்து சமுதாயத்தைத் திறமையாகப் பாதுகாக்கிறது. இத்தகைய பொதுவான பிணைப்புகள் இருந்தபோதிலும் ஒரே குழுவினுள்ளும் பல வேறுபாடுகள் இருக்கின்றன என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

ஒரு சமுதாயத்தின் தோற்றத்திலும் அதன் வளர்ச்சியிலும் சமயம் அடிப்படையான முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது. இது ஒரு மரத்தின் வேர்களைப் போன்று கண்ணுக்குப் புலப்படாது உள்ளது. இவ்வாறு சமயம் சமுதாயத்தின் பின்னணிச் சூழல் என்று சொல்லப்படுகிறது. சமயம், சமுதாயத்தை உருவாக்குகிறது ; அதை வளர்க்கிறது; அதனைச் சரியான கோணத்தில் அமைக்கிறது.

**சமயம் என்பது என்ன ?**

சமயம் பற்றிய ஒப்புக் கொள்ளத்தக்க வரையறை ஒன்றை முறைப்படுத்துவது என்பது மிகவும் கடினமானதாகும். நாம் சமயக் கோட்பாடு எவ்வாறு எழுந்தது என்பதை அறிந்து கொண்டால், சமயம் பற்றிய கோட்பாடு மிகத் தெளிவாக விளங்கும். சமயம் என்பது மனித அனுபவம், சரித்திரம், கலாச்சாரம் என்ற கருத்தாகக் கூறப்படலாம். வியப்பு, பயம், பக்தி போன்ற மனித உணர்வுகளை ஒருங்கு இணைப்பது சமயம்

என்று கூறலாம். மனித சமுதாயத்தின் தோற்றத்தில் எப்பொழுது மதசம்பந்தமான நம்பிக்கைகளும், பழக்கங்களும் தோன்றின என்பதை நாம் குறிப்பிட்டுக்கூற முடியாது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் மனிதன் மிருகத்திற்கும் தனக்கும் குறைந்த வேறுபாடுகளையே பெற்றுக் காட்டுமிராண்டியாக இருந்தபோது புனிதமான அல்லது இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்தி போன்ற நம்பிக்கைகள் எதுவும் இருந்ததில்லை. காலம் உருண்டோடி கற்கால நிலையிலுள்ள மனிதன் தன் வாழ்வில் நிலையான தன்மையும் ஒழுங்கு முறையையும் பெற்றபொழுது தெய்வீகசக்தி போன்றவைகளில் நம்பிக்கை ஏற்படலாயிற்று. மனிதன் தான் பெற்றுள்ள வாழ்க்கை, சக்தி, உணர்ச்சிகள் போன்றவற்றால் இவ்வுலகை நோக்க ஆரம்பித்தான். இயற்கைப் பொருள்களான மரங்கள், ஆறுகள், மலைகள் போன்றவைகளுக்கு உயிரும், உணர்வுகளும் தரப்பட்டன. இவ்வாறு வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை மரம், மலை, ஆறுகள் போன்ற பொருள்களின் செயல்களால் ஏற்படும் கருத்துக்கள் மூலம் மனிதன் விளக்க ஆரம்பித்தான். இத்தகைய நம்பிக்கைகள் கொண்ட கொள்கை ஆன்மீகம் என அழைக்கப்பட்டது. ஆன்மீக வாழ்வு நவீன சமயக் கோட்பாட்டின் முன்னோடி என இ. பி. டெய்லரும் மற்றும் பல அறிஞர்களும் எடுத்துரைத்தார்கள். இடிமுழக்கம், புயல்கள் போன்ற இயற்கையின் சீற்றத்தால் ஏற்படும் பயம், பீதி, கொடுமை ஆகியவை படிப்படியாக மனிதனை வன்முறையாளனாகவும் பழிவாங்கும் இயல்புடையவனாகவும் கருதப்படும் தனிமனித நிலைக்கு மாற்றியதுடன், அத் தனிமனித நிலையில் எப்படியாவது அவை அமைதிப்படுத்தப்படுகின்றன என்று வேறு சில அறிஞர்கள் வாதிடுகின்றனர். ஆரம்பகாலத்தில் சமயம் இவ்வாறே தோன்றியது எனவும் கூறப்படுகிறது. எது எப்படியாயினும், சமயம் இன்னது என்று உணரப்பட முடியாதபடி ஒன்றுடன் ஒன்று பிணைக்கப்பட்ட பல தோற்ற வேறுபாடுகளைக் கொண்டிருப்பதால், இங்குக் கூறப்பட்ட சில கொள்கைகள் சிறிதளவாவது உண்மையானவை என்பது ஒப்புக் கொள்ளத் தக்கது.

### பெரும்பான்மைச் சமயங்களும் சிறுபான்மைச் சமயங்களும்

பெரும்பான்மைச் சமயங்கள் அல்லது முக்கியத்துவம் வாய்ந்த சமயங்கள் என அழைக்கப்படும் சமயங்களின் தோற்றத்துக்கு முன்பே மக்கள் சில வகையான சமயங்களை—அவை எவ்வளவு பண்படாததும், ஆன்மீகத் தன்மை குறைவாகவும் இருந்த போதிலும் — பின்பற்றி வந்தார்கள். கிறிஸ்தவ சமயத்தின் தோற்றத்துக்கும் முற்பட்டது கிரேக்க, ரோமானிய சமயங்கள்.

இம்மக்களின் தெய்வங்களில் ஆண் தெய்வங்களும், பெண் தெய்வங்களும் பல இருந்தன. அவற்றில் முதன்மை வாய்ந்தது சீயஸ் அல்லது ஜுபிடர் ஆகும். ஹோமர் தனது 'இலியட்' 'ஒடிசி' போன்ற காவியங்களில் இத் தெய்வங்களைப் பற்றிய சுவையான — தெளிவான அமைப்பை நமக்குத் தருகிறார். அத்துடன் அத் தேவர்களும் தேவதைகளும் எவ்வாறு தங்களை டிராய் நகரப் போரில் ஈடுபட்டிருந்த வீரர்களுடன் நெருக்கமாகத் தொடர்புபடுத்திக் கொண்டனர் என்றும் அவர்களின் பக்தர்களுக்கு எப்படி உதவியாக இருந்தனர் என்றும் விளக்குகிறார். அரேபியாவில் கூட, இஸ்லாமிய சமயம் தோன்றுவதற்கு முன்னால், அங்கு நாடோடிக் கும்பல்களாக வாழ்ந்த மக்களிடையே ஒரு விதமான சமயப்பழக்கங்கள் நிலவிவந்தன. அவர்கள் பல கடவுள்களை வழிபட்டும் வந்தனர். இதேநிலை, வரலாற்றுக்கு முற்பட்ட கார்த்தேஜ், சைனா, ஜப்பான் மேலும் பலநாடுகளிலும் இருந்தது என்பது உண்மை. ஆனால் இத்தகைய நம்பிக்கைகள் படிப்படியாக மறைந்தன.

பத்தொன்பது நூற்றாண்டுகளுக்கு முன்பாக, ஏசுகிறிஸ்து, கிறிஸ்துவ சமயத்தை நிறுவினார். இவ்வழியிலேயே, கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் முகமது நபிகளால் இஸ்லாம் மதம் வந்தது. இந்து மதத்தைத் தவிர, மற்றெல்லா மதங்களுக்கும் இதுவேதான் தோன்றிய வித்மாயிற்று என்பது உண்மை. இந்து மதம் யாரால் ஏற்படுத்தப்பட்டது, எப்பொழுது ஏற்படுத்தப்பட்டது என்பது யாருக்கும் தெரியாததொன்று. வேதங்களும், உபநிடதங்களும் கி.மு. 15-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டதெனக் கருதப்படுகிறது. ஆனால், இது பல இந்திய ஆராய்ச்சியாளர்களால் தவறு எனக் கருதப்படுகிறது. கி.மு. 2000 முதல் கி.மு. 2500 வரை பல அறிஞர்கள் வேத காலத்தைக் குறிப்பிடுவதும் தவறு. ஏனென்றால் அவை குறிப்பிட்டபடிவமுடைய தெய்வீகப் பாசுரங்கள் நிறைவு பெற்ற காலத்திற்குப் பிற்பட்ட காலத்தையே குறிக்கின்றன. அவை அப்பாசுரங்கள் எழுதப்பட்டு, அவை உண்மையாகவே பழக்கத்தில் இருந்து வந்த காலத்தைக் குறிக்கவில்லை.

எல்லாச் சமயங்களும் தங்களுக்கென்று இலக்கியப் படைப்புகளை பெற்றுள்ளன. அவை தங்களுடைய கோட்பாடுகளையும், சமய சித்தாந்தங்களையும், ஆன்மீக போதனைகளையும், வேறுசில சமயத் தொடர்புள்ள கருத்துக்களையும் நமக்கு அளிக்கின்றன. கடவுளையும், நல்லொழுக்கப் போதனையையும் பற்றிய முக்கியமான கோட்பாட்டில் எல்லா மதங்களும் ஒன்றோடுஒன்று ஒத்ததாகவே உள்ளன. பிற்காலத்தில் புத்த மதத்தினர், புத்தரையே

கடவுளாகக் கொண்டபோதிலும் புத்தர் கடவுள் என்ற ஒன்றைப் பற்றிக் கூறாததால், புத்த மதம் நீங்கலாக மற்ற எல்லா மதங்களும் கடவுள் உண்டு என்ற கொள்கையைக் கூறி வருகின்றன. கடவுள் உருவம் உள்ளவராகவோ, உருவம் அற்றவராகவோ தனி நிலை உள்ளவராகவோ, அவர் இவ்வுலகத்தைப் படைக்கிறார்; பாதுகாக்கிறார். முடிவில் சரியான நேரம் வரும்போது அதை அழிக்கிறார். அவர் அனைத்து சக்திகளையும் கொண்டவர். அனைத்தையும் அறிந்தவர். அவர் தாம் படைத்த அண்டம் முழுவதிலும் நிறைந்திருக்கிறார். அதே நேரத்தில் அவர் தத்துவங்களைக் கடந்த தனிப்பரம்பொருளாகவும், வரம்புகளுக்கு அப்பாற்பட்டவராகவும் உள்ளார். மனிதன் முற்றிலும் கடவுளையே சார்ந்துள்ளான். தன்னை முற்றிலும் கடவுளின் சித்தத்திற்கு விட்டுவிட வேண்டும். அவன் கடவுளை நேசிப்பதோடு இறைபணிக்குத் தன்னையே முற்றிலும் அர்ப்பணிக்க வேண்டும். இஸ்லாமிய மதம் மனிதன் இறைவனிடம் சரணாகதி அடைதலைப் பற்றி வலியுறுத்துகிறது. இஸ்லாம் என்பதன் பொருளே சரணாகதி என்பதாகும். ஒவ்வொரு முகமதியனும் தன்னை அல்லாவினுடைய சித்தத்திற்குப் பணிந்திடச் செய்ய வேண்டும். கிறிஸ்தவர்கள்கூட "உம்முடைய சித்தப்படி ஆகுக" என்று பிரார்த்திக்கிறார்கள். இந்த நம்பிக்கை வலியுறுத்தப்படும் விதத்தில் சில மாறுதலுடன் எல்லா மதத்திற்கும் பொதுவான பண்பு அமைந்துள்ளது. முக்கியம் வாய்ந்த எல்லா மதங்களும் கடவுள் கோட்பாட்டையும் கடவுள் இருப்பதையும் நம்பிக்கையையும் கொண்டுள்ளன. தேவதைகளும், தேவர்களும் இருப்பதில் உள்ள நம்பிக்கை பொதுவாக உள்ளது. இந்துமதம் முழு முதல் அல்லது பிரம்மம் என்ற கோட்பாட்டில் நம்பிக்கை கொண்டுள்ளது. பிரம்மம் என்பது உருவமற்ற கற்பித்துக் கூற முடியாத ஒரு பொருள். ஆனால், அது உருவமுள்ள வழி நடத்திச் செல்வதற்கான எளிய உருவுள்ள பொருளாகத் தன்னை வெளிப்படுத்துகிறது. இத்தனிநிலைக் கடவுள் அல்லது ஈஸ்வரன் பல பெயர்களில் பல வழிகளில் வழிபடப்படுகிறது. கடவுள் ஒருவன் என்றும் அவன் பல பெயர்களில் முனிவர்களால் அழைக்கப்படுகிறான் என்றும் வேதங்கள் கூறுகின்றன. தெய்வீகத்தின் ஒரு துளி எல்லா மனிதர்களிடமும் நிறைந்திருக்கிறது அதுவே கடவுளைப்பற்றி அறிவதில் அவனுக்கு உதவுகிறது.

இஸ்லாம் மதம் ஆன்மீகத்தையும் இம்மைக்குரிய வாழ்வினைப் பற்றிய கருத்துக்களையும் ஒன்றாக இணைக்கக்கூடிய ஒரு மதமாக உள்ளது. இது தனிமனிதன் இறைவனிடத்தில் கொண்டுள்ள தொடர்பைப்பற்றி மட்டுமல்லாத ஒரு சமுதாய

அமைப்பில் தனிமனிதனின் தொடர்பைப்பற்றியும் ஒழுங்குபடுத்த முற்படுகிறது. மதசம்பந்தமான சட்டங்களால் ஆட்சி நடத்தப்படும் மாநிலங்கள், மதச் சார்புள்ள நாடுகள் என அழைக்கப்படுகின்றன.

எல்லா மதங்களும் இறைவழிபாட்டையும் இறைவனிடம் சரணாகதியடைதலையும் பற்றி வலியுறுத்துகின்றன. அவற்றினுடைய நீதி போதனைகள் முக்கியமான நற்பண்புகளில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்ட போதிலும் நடைமுறையில் ஒன்றாகவே உள்ளன. அவைகள் நற்குணங்களையும் தீய பண்புகளையும் வேறுபடுத்துகின்றன. நற்பண்புகள் இறைவனின் தன்மையை நோக்கி அழைத்துச் செல்கின்றன. தீயவை பாவத்திற்கும் துன்பத்திற்கும் நம்மை அழைத்துச் செல்கின்றன. தீய பழக்கங்கள் தெய்வீகத் தன்மையுடன் கூடிய ஒழுங்கு முறையான திட்டங்களைத் தடை செய்து அவற்றின் முன்னேற்றத்தைத் தடுக்கின்றன. இந்து மதம் எந்நேரத்திலும் எந்த சூழ்நிலையிலும் எந்த இடத்திலும் விதி விலக்குகளை அனுமதிக்காமல் எல்லோராலும் கடைப்பிடிக்கப்பட வேண்டிய பல நற்பண்புகளை எடுத்துரைக்கின்றது. அவை யாவன : அஹிம்சை, வாய்மை, சொல், செயல், எண்ணம், இவற்றில் தூய்மை, பிரம்மசரியம், பிறர்பொருளைக் கவராமை, புறத்தூய்மை, அகத்தூய்மை, போதுமென்ற மனத் தேவைக்குமேல் பொருள் குவிக்கும் எண்ணத்தை மறத்தல், உண்ணாநோன்பு, இறைவழிபாடு, மதசம்பந்தமான சடங்குகளை நடத்துதல் போன்ற தூய்மைப்படுத்தும் செயல்கள், மத சம்பந்தமான பொருத்தமான இலக்கியங்களைப் படித்தல், பலனை எதிர்பாராது கடமையைச் செய்து செய்கின்ற அனைத்துச் செயல்களையும் ஆண்டவனிடம் அர்ப்பணித்தல். இவற்றின் பயனாகவே நல்லொழுக்கத்தின் அஸ்திவாரம் எழுப்பப்படுகிறது. அவைகளில் சில கீழ்க்கண்ட வடிவத்தில் கொடுக்கப்படுகின்றன. உண்மை பேசு, நற்பண்புள்ள செயல்களைச் செய், பெற்றோர், ஆசிரியர், விருந்தினர் ஆகியோர்களை வணங்கிக் கௌரவி. மகான்களின் செயல்களை நமது கொள்கைகளாகவும், வழிகாட்டியாகவும் ஏற்றுக்கொள்ளுதல் இது போன்றவைகள். ஏசுநாதரின் மலைப்பிரசங்கம், கிறிஸ்துவ மதத்தின் நீதிபோதனைக் கருத்துக்களை வெளிபடுத்துகிறது. உன்னைப்போல் பிறரையும் நேசி. உன் விரோதியினிடத்தும் அன்பு காட்டு. உன்னை அடிப்போர்களை நீ வாழ்த்து. உன்னை வெறுப்போர்களுக்கும் தண்டிப்போர்களுக்கும் நன்மை செய். ஆகையால் உனக்கு மனிதன் என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகின்றாயோ அதை நீ மற்றவர்களுக்குச் செய் என்பதும் விதியாகும். யூதமதம் சட்டத்தைப் போதிக்கிறது. ஆனால், ஏசுகிறிஸ்து அன்பைப் போதித்தார் என்று சொல்லப்படுகிறது.

எனவே அன்பு, சகோதரத்துவம் என்பவை சமயங்களின் அடிப்படைகளாகின்றன.

இஸ்லாமிய மதத்தின் நீதி போதனைகள் மிகவும் எளியவை. யாத்திரீக மக்களுக்கு முகமது நபி கூறுவதாவது, "என்னுடைய போதனைகள் எளிமையானவை. அல்லா என்பவர் ஒரே கடவுள், முகம்மது என்பவர் அவருடைய தீர்க்கதரிசி. உருவ வழிபாட்டைக் கைவிடுங்கள். திருடாதீர்கள். பொல்லாங்கு கூறாதீர்கள். பொய் சொல்லாதீர்கள். போதைக்குட்படாதீர். இப் போதனை களை நீங்கள் பின்பற்றினால் நீங்கள் இஸ்லாம் மதத்தைப் பின்பற்றுபவர் ஆவீர்". இவற்றைத் தவிர இஸ்லாம் மதம் ஒரு நாளைக்கு ஐந்து முறை தொழுகை, ரம்சான் மாதத்தில் உண்ணா நோன்பு, நல்வாழ்க்கை வரி செலுத்துதல், வாழ்வில் ஒரு முறை யாவது மக்காவிற்குப் புனித யாத்திரை செல்லுதல் போன்றவை களையும் போதிக்கிறது.

## 2. சமயச் சடங்குகள்–உண்ணாநோம்பு- இறை வழிபாடு

சமயச் சடங்குகள் என்றால் என்ன ? சமயத்தால் பரிந்துரைக் கப்பட்டு உடலால் செய்யக்கூடியனவும், மதத்தால் உண்மையின் சின்னமாகக் கருதப்படக்கூடிய செயல்களும் சமயச் சடங்குகள் என வரையறை செய்யப்படலாம். அவை முக்கியமான சின்னங் களாயிருப்பதால், சமய விழாக்களில் அவற்றின் பயனும்-செய் முறையும் மிகச் சிறப்பு வாய்ந்தவையாக அமைகின்றன. தங்களு டைய பழக்கங்களோடு பொருந்தியுள்ள சில வகையான சடங்கு நெறிகளை எல்லா மதங்களும் பெற்றுள்ளன. இறைவன் மேலான விருந்தாளியாகக் கருதப்படுவதால், ஒவ்வொரு இந்துவாலும் செய்யப்படும் அன்றாட வழிபாடு, அவ்விறைவனுக்குரிய சமயச் சடங்குகளின் சின்னமாகிறது. அக் கடவுளுக்கு எல்லாவித அரச மரியாதைகளும், கௌரவங்களும் அளிக்கப்படுகின்றன. கோயிலைச் சுற்றி வருதல், இறைவனின் திருமுன்னர் விழுந்து வணங்குதல் போன்றவை பக்தியின் சின்னங்களாகும். நாம் கடவுளுக்கும் படைக்கிறோம். கடவுளை நினைப்பதற்குரிய ஒரே வழி நாம் கடவுளும் நம்மைப் போல ஒருவர் என எண்ணுவதேயாகும். எனவே, சமயச் சடங்குகள் இறைவழிபாடாகிறது. இதுபோலவே, கிறிஸ்துவ மதத்திலும், பெயர்சூட்டு விழா மதமாற்றத்தைக் குறிக்கும் சின்னமாகும். அது இயேசுநாதரின் இறுதி விருந்துச் சடங்கு விழாவினை இணைக்கும் சின்னமாகவும் உள்ளது. ஆழ்ந்த பற்றுமிக்க இஸ்லாமியர் மேற்குத்திசை நோக்கித்

தொழுகை நடத்துதல் அவரது மக்கா நகர்ப் பயணத்தைக் குறிக்கும் செயலாகும்.

## சமயச் சடங்குகளின் முக்கியத்துவம்

எல்லா மதங்களும் அதனதனுக்குரிய சமயச் சடங்குகளைப் பெற்றுள்ளன. ஏனெனில், அவை இல்லாவிடில் மத நம்பிக்கை சிறிது காலத்திற்குப்பின் மறைய ஆரம்பித்துவிடும். சமய சடங்கு என்பது தானியத்தில் உள்ள உமி போன்றது. எப்படி மேல் தோல் இல்லாமல் தானியம் வளர முடியாதோ அதுபோல சமய சடங்குகளும் சின்னங்களும் இல்லாமல் சமயவளர்ச்சி செழிக்க முடியாது. இத்தகைய சடங்குகளின் பணி யாது? நாம் கடவுளை வழிபடுவதன் காரணமாக நமது மனம் தூய்மை அடை கிறதென்பதை, சடங்குகள் நமக்கு எப்போதும் நினைவு படுத்து கின்றன. அன்றாடம் ஆண்டவனை வழிபடும் பழக்கம் நம் மனத்தைத் தீய குணங்கள், தீச்செயல்கள், பொய்மை மற்றும் சுய நலம் போன்றவைகளிலிருந்து நீக்கி தூய்மை படுத்துகிறது. இரண்டாவதாக, கட்புலனாகாத உயர்ந்த மத உண்மைகளைச் சடங்குகள் கட்புலனாகும் பொருள்களாக மாற்றுகிறது. உருவ மல்லாத இறைவனை நினைத்து தியானித்தில் என்பது பெறும் பாலும் இயலாத தொன்றாகும். எனவே, ஒருவன் கட்புலனாகும் வகையில் தெய்வீகத் தன்மையை உணரும் விதத்தில் தனக் கென்று ஒரு வடிவத்தையோ, சின்னத்தையோ வைத்துக் கொள் கிறான். அதே நேரத்தில் அவ்வுருவமே கடவுள் என்பதையும் நாம் அறிகிறோம். மணிகள் அல்லது கோலிகள் மூலமாக ஒரு குழந்தைக்கு மிகவும் எளிதாக எண்களைப் போதிக்கலாம். அதே சமயம் சடங்குகள் நமது நம்பிக்கைளைப் புலப்படுத்தி அறியச் செய்கிறது. இவ்வாறு இறைவனின் திருமுன்னர் நாம் படைக்கும் பழங்கள் அல்லது உணவின் மூலம் (அமுதின் மூலம்) நமது நன்றியறிதல் இறைவனுக்குப் புலப்படுத்தப்படுகிறது. சமயச் சடங்குகள் நமது உள்ளத்தில் தேக்கிவைக்கப்பட்டுள்ள சமய உணர்வுகள் அல்லது உணர்ச்சிகளின் வடிகாலாக அமைகிறது. கடினமான காசிப் புனிதப்பயணத்தை ஒருவன் மேற்கொள்கிறான். இச்செயல் அவனது சமய உணர்ச்சி வேகத்திற்கு வடிகாலா கிறது. இச்சடங்குகள் சில நீதி சார்ந்த குறிக்கோள்களைக் கொண்டுள்ளது. உண்ணாநோன்பு, இராக்-கண் விழித்தல், சமயச் சடங்குகளைக் கொண்ட உண்ணுதலிலும், குடித்தலிலும் உள்ள தீவிரமான சட்டதிட்டங்கள் அடங்கிய முறைகள் சுயகட்டுப் பாட்டை நோக்கி அழைத்துச் செல்கின்றன. இவ்வாறு ஒழுக்க நெறி மதிப்புக்களையும் பெற்றுள்ளது. டி. எஸ். சர்மா, இதன்

தொடர்பாக "நன்கு அமைக்கப்பட்ட சமயச் சடங்குகள் பிளவு படுத்தும் வெளிப்புற சக்திகளிலிருந்து, மத அடிப்படையிலான சமுதாயத்தைக் காக்கும் திறனுள்ளது", என்று கூறுகிறார்.

## இறை வழிபாடு

இறைவழிபாடு என்பது எல்லாச் சமயங்களுக்கும் பொது வானதும் மிகச் சிறப்பு வாய்ந்ததுமான ஒரு அம்சமாகும். மத உணர்வை வெளிப்படுத்தும் முதன்மையான செயல்வகையே இறைவழிபாடு என்று சில அறிஞர்கள் விவரிக்கின்றனர். இது வாழும் மதத்தினது முக்கியமான பாங்காகும்.

இறைவழிபாடு என்பது ஒருவன் தன் ஆசைகளையும் ஏக்கங் களையும் இறைவனிடத்தில் முறையிட்டு, அவை நிறைவேற்று மாறு வேண்டிக் கொள்ள, இறைவனிடம் பேசும் தனிப்பட்ட வார்த்தைகள் ஆகும். உண்மைக்கும், தூய்மையான உள்ளத் திற்கும் மாறுபாடு இல்லாமல் கடவுளிடம் உள்ளார்வத்துடனும், உண்மையுடனும் செய்யப்படும் வழிபாடே இறைவழிபாடாகும். உள்ளார்வத்துடன் செய்யப்படும் வழிபாடு, இறைவனுக்கும் வழிபாடு செய்பவனுக்கும் இடையே ஒரு நல்லுறவை நிலை நிறுத்துகிறது. நல்ல முறையில் செய்யப்படும் இறைவழிபாட்டு முறை ஒருவனை உள்ளார்ந்த சமய நெறியுடையவனாகவும், நல்ல வனாகவும் வாழச் செய்கிறது.

எல்லா மதங்களும் இறைவழிபாட்டின் அவசியத்தை எடுத் துரைக்கின்றன. ஒரு சராசரி இந்துவானவன் தன் வீட்டிலோ, கோவிலிலோ இறைவழிபாடு நடத்தும் போது தனது நீண்ட ஆயுளுக்காகவும், நிறைந்த செல்வத்திற்காகவும், தன் குடும்பத் திலுள்ள அனைவரது நலத்திற்காகவும் இறைவனை வழிபடுகிறான். இயேசுநாதர் வழிபாட்டின் நற்திறத்தைப் பற்றிய கருத்தில் நம்பிக்கை கொண்டிருந்தார். தம் சீடர்களையும் மக்களையும் கடவுளைப் பிரார்த்தனை செய்யுமாறு இடைவிடாது வலியுறுத்தி வந்தார். இஸ்லாமியமதம், அன்றாடம் ஐந்து முறை தொழுகை யினைக் கொண்டிருப்பதலிருந்தே, இறைவழிபாட்டை அது வலியுறுத்தும் விதம் மிகத் தெளிவாகத் தெரிகிறது. இது முகமதி யரது அடிப்படைக் கடமைகளில் ஒன்றாகும். இறைவன் மீது கொண்டுள்ள நம்பிக்கையின் தீவிரத்தையும், முழுமனத் துடன் — உள்ளார்வத்துடன் செய்யும் பிரார்த்தனையினையும் பொறுத்தே தொழுகையினால் ஏற்படும் பயன் அமைகிறது. ஆரம்பநிலை முதல் மறைபொருள் வெளிப்படுத்தும் நிலைவரை, இறைவழிபாடு மனிதன் இறைவனுடன் தொடர்பு கொள்ள

வேண்டும் என்ற ஆசையினை வெளிப்படுத்தக் கூடியதாக உள்ளது.

வழிபாடுகளில் பலவகை உண்டு. மிகவும் பொதுவான—வகை யான வழிபாடு என்பது உலகியல் இன்பங்களுக்காகவும் வசதிக் காகவும், பொருள், கால்நடை, நிலம் போன்ற பொருள்களுக்காகவும் நாம் ஆண்டவனை வழிபடுவதேயாகும். துன்பத்தின் பிடியிலிருக் கும் மனிதன் அடிக்கடி அமைதிக்காகவும், துன்பம் நீங்கி நல்வாழ்வு பெறவும் வேண்டி இறைவனை வழிபடுகிறான். இத்தகைய வழிபாட்டு முறை "இரக்கின்ற இறைவழிபாடு" என அழைக்கப் படுகிறது. இரண்டாவது வகையான பிரார்த்தனை பாவம் செய்துவிட்டு அதற்காக வருந்திப் பாவமன்னிப்பு வேண்டிச் செய்யப்படுவதாகும். இது இறைவனது தெய்வீக இரக்கத்தையும் கருணையையும் வேண்டி மன்னிப்புக்காகவும், மனப்பூர்வமாக வேண்டும் பிரார்த்தனையாகும். மற்றொரு பிரார்த்தனை நாம் ஆண்டவனிடமிருந்து பெற்ற நன்மைகளுக்காக நாம் அவருக்கு மனப்பூர்வமாக நமது நன்றியறிதலையும், அன்பையும் வெளிப் படுத்தும் முறையாகும்.

இவற்றையெல்லாம் விடச் சிறந்த பிரார்த்தனை என்பது எதிலும் பற்றில்லாத வகையில் நடத்தும் பிரார்த்தனையேயாகும். பக்தன் எவ்விதமான பொருளையும் கடவுளிடமிருந்து தனக்காக வேண்டாமல், இறைவனது பெருமைகளைக் குறித்துப் பாடுகிறான். இறைவனது மகத்துவம், கம்பீரம், பெருமை, தயாளம் போன்ற அருங்குணங்களை மனமுருகிப்பாடுவதன் மூலம் மகான்களும், சமயச்சீர்திருத்தவாதிகளும் தங்களின் ஆன்ம அதிதியை வெளிப்படுத்துகின்றார்கள். இதுவே மிகவும் உயர்ந்த நிலையில் நிறைவுமிக்க பக்தி வழிபாடாகும். பற்றற்ற பக்தியின் மற்றொரு பாங்கு உலக மக்களின் மகிழ்ச்சிக்காகவும், அவர்களின் நல் வாழ்விற்காகவும் இறைவனை வழிபடுவது ஆகும். உயர்ந்த உள்ளமுடையவர்கள் மனித சமுதாயத்தின் உயர்விற்காக இறை வனிடம் மன்றாடுகிறார்கள். அவர்களுடைய இத்தகைய உயர் வகை வழிபாடு முனிவர்களும், யோகிகளும், சமயச்சீர்திருத்த வாதிகளும் தங்கள் மனப்பூர்வமாக வழிபட்ட வழிபாடுகளைத் தொகுத்து, பரம்பரை பரம்பரையாகக் கொடுத்து. மக்களின் பொதுச் சொத்தாக வைக்கப்பட்டு எதை அவர்கள் தினந்தோறும் தகுந்த சமயத்தில் பாராயணம் செய்விக்கும் முறைப்படுத்தப் பட்ட வழிபாடேயாகும். சங்கரர் ஒரே கடவுளாயிருப்பவரின் பல்வேறு வடிவங்களைப்பற்றியிருக்கும் பல பாசுரங்களைத் தொகுத்தளித்தார். அது முக்தியைத் தவிர வேறொன்றையும்

குறிப்பாக வேண்டாத வழியாகும். பிற மதங்களில்கூட இது போன்று முறைப்படுத்தப்பட்ட வழிபாடுகள் உள்ளன. கிறிஸ்தவர்களின் இறைவழிபாடு இதற்கொரு சான்றாகும். இத்தகைய பிரார்த்தனைகள் மனிதனைத் தூய்மையுடைய்வனாகச் செய்கிறது.

## உண்ணாநோன்பு

உண்ணாநோன்பு என்பது உடலையும் உள்ளத்தையும் தூய்மைப்படுத்தும் செயலாகும். இந் நோன்பை அனுசரிக்கும் மனிதனது மனநிலையியேதான் இறைவனின் அருளையும் ஆசியையும் பெறுவதற்குத் தகுதியுடையவனாக மாறுவதற்கு ஏற்ற செயலைச் செய்கிறோம் என்ற நினைப்பைக் கொடுத்து, அமைதியைத் தருகிறது. அவன் செய்யும் முயற்சியினை பிறர் அறியச் செய்வதுடன், அவனுக்கு மனநிறைவையும் தருகிறது. அது தெளிவாக, தீர்க்கமாக நோன்புறுதியினை நினைவுபடுத்துவதுடன் அவனை எல்லா நேரத்திலும் ஆன்மீக நெறிக்குட்படுத்துகிறது. உண்ணாநோன்பு எல்லா மதங்களாலும் வலியுறுத்தப் படுகின்றது. பக்தர்கள் அதை குறுகிய காலமோ, நெடுங் காலமோ கடைப்பிடிக்கிறார்கள். இவ்வாறு இந்துவாக இருப்பவன் ஏகாதசிகளில் உண்ணாநோன்பு மேற்கொள்ளுமாறு எதிர்பார்க்கப் படுகிறான். இது தவிர சில முக்கியமான வழிபாடுகளைத் தினமும் செய்ய வேண்டியவனாகவும் இருக்கிறான். ஸ்ரீராமநவமி, மகாசிவ ராத்திரி போன்ற குறிப்பிடத்தக்க சில நாள்கள் உண்ணாநோன்பு நோற்க ஏற்ற நாள்களாகும். அன்றாட பூஜைகள் அல்லது வழிபாடுகள் நடத்தும் வரையில் உண்ணாதிருத்தலும் உண்ணா நோன்பாகும். ரம்ஜான் மாதத்தில் இஸ்லாமியர்கள் காலை முதல் மாலை வரை உண்ணாநோன்பு ஏற்பது வழக்கமாக உள்ளது.

உண்ணாநோன்பு அல்லது உபவாசத்தைப் பொறுத்தவரையில் கடினமான சட்ட திட்டங்கள் எதுவும் இல்லை. விரதம் மேற்கொள்பவர்கள் மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்தாலோ பலவீனமாக இருந்தாலோ அவர்களும் உண்ணாநோன்பு நோற்கும் வகையில் பல விதிவிலக்குகள் அளிக்கப்பட்டுள்ளன. அத்தகையவர் பழங்களும், கஞ்சியும் உட்கொள்ளலாம்.

உண்ணாநோன்பு என்பது பரிகாரச் செயல் ஆகும். தன்னுடைய பாவங்களுக்காகவோ மற்றவர்கள் செய்த பாவங்களுக்குப் பரிகாரமாகவோ உண்ணாநோன்பு மேற்கொள்ளப்படுகிறது. இதற்காக, நீடித்த உண்ணாநோன்பு சிலரால் மேற்கொள்ளப்படுகிறது. உண்ணாநோன்பு பற்றி சிந்திக்கும்போது மகாத்மா காந்திஜியினுடைய திருப்பெயரை நாம் எல்லோரும் நினைவிற்கொள்ளுதல்

வேண்டும். அவர் பலமுறை நாட்டினை வகுப்புவாதக் கலவரங்களுக்கு எதிராக ஒரு தவம்போல நெடியதொரு உண்ணா நோன்பை மேற்கொண்டார். இதுவே சுயசுத்தி செய்தற்கொரு வழியாகவும் அமைந்திருந்தது.

ஒருவன் செய்த பாவங்களுக்குப் பிராயச்சித்தமாகவே, கழுவாயாகவோ உண்ணாநோன்பு பலமுறை அமைகிறது. சில சமயங்களில் தங்கள் இரண்டு கைப்பிடி அளவே துறவிகள் உணவு உண்ணுமாறு கட்டுப்படுத்தப்படுகின்றனர். சந்திராயண விரதம் என்றதொரு விரதமும் உண்டு. இந்த விரதத்தில் அமாவாசை வரும் முதல் பதினைந்து நாள்கள் உணவைப் படிப்படியாக குறைத்தும் அடுத்த 15 நாள் படிப்படியாக உயர்த்தலும் ஒரு முறையாக வைக்கப்பட்டுள்ளது. சிறந்த வகையான உணவுகூட நிலையான அல்லது இயக்கு உணர்வு குறைந்த நிலையை உருவாக்கப் பொறுத்தமானது. எனவே பன்முறை, உண்ணாநோன்பு இருத்தல் தேவையானது. ஒருசில, தீவிரமான முயற்சிகளில் சாகும்வரை உண்ணாவிரதம் என்று கூறத்தக்க தீவிரமான நிலை பிராயச்சித்தத்திற்காகத் தேவையாக இருந்தபோதிலும் மதநூல்கள் உண்ணாநோன்பின்போது உடல் நன்முறையில் பாதுகாக்கப்பட வேண்டுமென்று கூறுகின்றன. புதிய ஏற்பாட்டில் உள்ள பரிசுத்த மத்யூவில், ஏசுகிறிஸ்து சாத்தானால் ஏவப்பட்டு பாலைவனங்களின் வழியாக அழைத்துச் செல்லப் பட்டார் என்று கூறப்பட்டுள்ளது. அவர் நாற்பது இரவும் பகலும் உண்ணாநோன்பு இருந்த பின்னரும் பசித்தோற்றமளிக் கின்றவராக இருந்தாரில்லை. இதுவே, உண்மையான உண்ணா நோன்பின் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்று. ஏசுநாதர் தம் சீடர் களிடம் அவர்கள் உண்ணாநோன்பு இருக்கையில் கவலையுடன் தோற்றமளிக்காமல் தலைக்கு எண்ணை தடவி முகத்தை நன்கு கழுவித் தூய்மையாக வைத்திருக்குமாறு கேட்டுக் கொண்டார். உண்ணாநோன்பின் அடையாளம் பிறர்க்குத் தெரியப்படுத்தப் படும்போது அது தன்னலத்தைக் தோற்றுவிக்கிறது. அது உண்மையான உண்ணாநோன்பிற்கு முரண்பாடாக அமைந்துள்ளது

## 3. சகோதரத்துவம் பற்றிய கோட்பாடு

நவீன காலத்தில் மனநிலை என்பது தனிமனிதனிடமிருந்து சமுதாயத்திற்கும், ஒருவனுடைய சுய் சமூகத்திலிருந்து உலக சமுதாயத்திற்கும் விரிந்து செல்கிறது. வேறுவிதமாகக் கூறப் போனால், தனிமனிதன் அல்லது தனிமனித சமுதாயத்தின் குறுகிய எல்லைகள் கைவிடப்பட்டு எல்லாக் குடிமக்களையும்

ஒன்றாகக் கொண்ட உலகம் முழுவதையும் ஒரே குழுவாக கருதப்படும் நிலை வந்துள்ளது. இது தற்காலத்திற்குச் செயல் வடிவம் பெறுவதைவிட, கருத்து வடிவமாகவே அமைந்துள்ளது என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. முதல் உலகப் பெரும் போருக்குப் பிறகு தோன்றிய உலகநாடுகளின் சங்கம் ஒருங்கிணைந்த உலகம் என்ற கருத்திற்கு முதல் உருவம் கொடுத்தது. இவ்வுலக நாடுகள் சங்கத்தின் தோல்வி என்பது இக்கொள்கைக்குத் தோல்வி அன்று; இந்த வேறுபட்ட நாடுகளை நிர்வகித்து வந்த ஆட்சியாளர்களுக்கு ஏற்பட்ட தோல்வி ஆகும். ஐக்கிய நாடுகளின் சங்கம் என்பது சகோதரத்துவம் என்ற கொள்கையை உருவாக்குவதில் இரண்டாவது முயற்சியாக இருந்தது; இன்னும் இரண்டு, மூன்று நூற்றாண்டுகளுக்குப் பிறகு சகோதரத்துவக் கொள்கை என்பது சாத்தியமாகக் கூடியது என்பதற்குச் சான்றாக அமைந்துள்ளது. சமுதாயத்தில் உள்ள ஒவ்வாத முரண்பாடுகளைக் களையவும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. உலக சகோதரத்துவம், ஒரே நாடு என்ற கொள்கை போன்ற கருத்துக்களைச் சுமுகமான முறையில், மனிதர்களிடையே ஒருங்கிணைக்கும் முயற்சிகளும் மேற்கொள்ளப்படுகின்றன.

இத்தகைய ஏற்பாடுகளின் மூலம் பெறப்படும் நடைமுறைப் பயன்கள், அளவிடற்கரியவை. ஒரு வகையில், மனிதன் தன் எல்லைகலை அல்லது பொருள்களை விரிவாக்குவதற்காக மற்ற மனிதனுடன் போரிடும் நிலைமை தவிர்க்கப்படுகிறது. மனிதன் மேன்மேலும் வளம் பெறத்தக்க வகையில் அமையும் ஆக்கப் பூர்வமான செயல்களில் தன் நேரம் அனைத்தையும் செலவிட இது, உதவியாக உள்ளது. கொடுமையும், மாற்றமுடியாத போட்டி மனப்பாங்கும் அதனுடன் இயைந்த ஆக்கிரமிக்கும் குணமும் சகோதரத்துவ உணர்வின் மூலம் மறக்கடிக்கப்படுகின்றன. போருக்கான அடிப்படைக் காரணங்களும் அறிவியலின் துணை கொண்டு பயங்கரமான தீமை விளைவிக்கும் ஆயுதங்கள் செய்யும் முயற்சியில் ஈடுபட்டு அழிவினைத் தரும் செயல்களிலிருந்தும் மனிதனை மீட்டு ஆக்கப் பணிகளிலும் அமைதிப் பணிகளிலும் அவனை ஈடுபடுத்துகின்றன. அது, அழிவுப் பாதையிலிருந்து மனித மனத்திற்கு விடுதலை அளிக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது. ரஷிய நாட்டு தீர்க்கதரிசியும் எழுத்தாளருமான டால்ஸ்டாய், தம்முடைய எழுத்துகளில் (புத்தகங்களில்) வருங்காலத்தில் ஏற்படும் இந்த நல்ல வாய்ப்புகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

விலங்கினங்களுக்கில்லாத ஆறாவதறிவாகிய ஆய்ந்தறியும் பண்பை மனிதன் பெற்றிருத்தலே,. மற்ற விலங்கினங்களுக்கும்

மனிதனுக்கும் உள்ள மிக முக்கியமான அடிப்படை வேறுபாடு ஆகும். இத்தகைய உயர்ந்த பண்பைப் பெற்றிருந்தும்கூட மனிதன் தானாகவே தனித்து வாழ முடிவதில்லை. ஏனெனில் அவன் உணர்வுப் பூர்வமாகவே, கூடிவாழும் தன்மை கொண்ட விலங்கினமாக உள்ளான். எனவே, அவன் தனது சக மக்களுடன் இணைந்தே வாழ வேண்டியுள்ளது. அன்றியும், மனிதனுக்கு எதைச் செய்யவேண்டும், எதைச் செய்யக்கூடாது என்று பிரித்தறியும் மிக உயர்ந்த ஒழுக்க நெறியறிவு இருக்கிறது. மனிதன் போட்டியினால் அதிகநாள் நன்மை பெறமுடியாது என்பதையும், ஆதிக்க உணர்வைக் கட்டுப்படுத்தாவிடில் மனித சமுதாயம் முழுவதும் அழிய நேரிடும் என்பதையும், எப்போது உணர ஆரம்பிக்கிறானோ, அப்போது முதல் தொலைதூரத்தில் எட்டாப் பொருளாக அமைந்த உலக சகோதரத்துவம் என்ற கருத்து நடைமுறைக்கு வர ஆரம்பித்துவிடும்.

சகோதரத்துவம் என்ற கருத்தின் அடிப்படை என்பது நாம் அனைவரும் பொதுவாகப் பெற்றுள்ள அறிவுத் திறன், பேசும் திறன் போன்ற பொதுவான குணம் அன்று. உணவு, உடை, உறைவிடம் போன்ற பொதுவான பொருள்களைப் பெறுதலும், சகோதரத்துவத்தைத் தரமுடியாது. ஏனெனில் உணவு, உடை, உறைவிடம் போன்ற பொதுவான தேவைகளை உலக சங்கங்கள் தீர்த்து வைத்திட முடியும். ஆனால், உலக சகோதரத்துவம் என்பது இன்றும் ஆழமான அடித்தளத்தில் அமைந்துள்ளது. இஃது உணர்வின் அடிப்படையில் அமைந்துள்ளது. உலக சகோதரத்துவம் என்பது நமது ஒழுக்கநெறிக்குரிய தனித்துவத்தில் நீடித்திருக்கும் அடிப்படையாகக் கொண்டமைகிறது. நாம் அனைவரும் கடவுளின் குழந்தைகள் என்பதும், நாம் பொதுவான ஒழுக்கத்தையும், ஆன்மீக பாரம்பரியத்தையும் பங்குகொள்கிறோம் என்பதும், அதுவே சகோதரத்துவத்தின் அடிப்படையை மிகவும் உறுதியாக்குகிறதென்பதுமே நம்மால் உணரப்படுகின்றன. எல்லாச் சமயங்களும் தங்களுடைய நீதிப்போதனைகளில் ஒத்தனவாகவே இருக்கின்றன. இந்த மூலக்கோட்பாட்டில் உலக சகோதரத்துவம் அமைகிறது. சமுதாயத்தில் ஏற்படும் முக்கிய மற்ற சில வேறுபாடுகளை நாம் ஒரேசீராக புறக்கணித்தல் வேண்டும். முழுமை அடையவேண்டும் என்னும் தூண்டுதலால் கிளர்ச்சியையும். தன்மைபெற்ற ஆன்மீக, ஒழுக்க நெறிமிக்கவன் மனிதன், சர்வ வல்லமை பெற்றவரும் எங்கும் நிறைந்திருப்பவரும் ஆகிய இறைவன் முன்பு அனைவரும் சமம் என்பது போன்ற எண்ணங்கள் நமது இரத்தத்தோடு ஊறியிருத்தல் வேண்டும். அத்தகைய நிலை வரப்பெறின், பூமியில் பொங்குமாவளம் நிலவும்

காலம் உதயமாகி விட்டதென்றும், ஆண்டவனின் இராச்சியம் உணரப்பட்டுவிடும் என்னும் நம்பிக்கையுடன் கூறலாம்.

இத்தகைய உணர்வு, ஏற்படுவதில் உள்ள ஏராளமான இன்னல்களை, நாம் குறைத்து மதிப்பிடலாகாது. மனிதன் போட்டி, பொறாமை அல்லது பிறரைப் பார்த்து அவரைப்போல நடக்க வேண்டும் என்று எண்ணும் மனப்பக்குவம், முரண்பாடு அல்லது சண்டையிடுதல், பிறருக்குக் கீழ்ப்படியாமல் இருக்கும் தன்மை போன்றவைகளால் உருவாக்கப்பட்டிருக்கிறான் என்று வாதிக்கின்ற சில உளவியல் அறிஞர்களும் உண்டு. எனவே, அவனுடைய இயற்கையான குணம் இத்தகைய சகோதரத்துவ உணர்வினை எதிர்த்துச் செயல்படுகிறது. வரலாற்றுக் காலத்துக்கு முன்பும், வரலாற்றுக் காலத்திலும் உயிருக்கும், பொருளுக்கும் அதிபயங்கரமான எண்ணத்தை உண்டாக்கத்தக்க பூசல்களும் சண்டைகளும் மனிதர்களிடையே தொடர்ந்து இருந்தன என்பது உண்மையாகும். இதுவே, உலகெங்கிலும் காணப்பட்ட பொதுவானதொரு நிலையாகும். எந்த மனித இயல்பானது கொடிய போர்களையும் பூசல்களையும் உண்டாக்குகிறது என்று கருதப்படுகிறதோ, அதை ஒருபொழுதும் மாற்ற முடியாது என்று ஒருவன் எளிதாக நம்புவதால், இத்தகைய முறை இத்தனை நூற்றாண்டுகளாக மாற்ற முடியாத உறுதியானதாக உள்ளது. ஆனால் இந்த விஞ்ஞான உலகில் சாதிக்க இயலாதது என்று எதுவும் இல்லை. போர் மற்றும் அதனுடன் தொடர்பு கொண்ட செயல்களுக்கு எதிராகவும் தொடர்ச்சியாகவும் உள்ள கட்டுப்பாட்டுக்கு உட்படும் முறையினை ஆரம்பத்திலிருந்தே செயல்படுத்தி வந்தால் இது படிப்படியாக மனிதனைப் போர் களைத் தவிர்க்கும் மனநிலைக்குக் கொண்டு செல்லும் என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள். உளவியல் அறிஞர்கள் குழந்தை களின் மனத்திலிருந்து பயஉணர்வை முற்றிலும் நீக்கவோ உண்டாக்கவோகூடிய வழிமுறைகளைக் கண்டறிந்துள்ளனர். ஆனால் அச்சஉணர்ச்சி என்பது தொற்றிப்பரவும் தன்மையுள்ளது. குழந்தைகள் அதை மற்றக் குழந்தைகளிடமிருந்தோ பெரியவர்களிடமிருந்தோ எளிதாக அறிந்து கொள்கின்றனர். எப்படியிருந்தாலும் தற்போதைய நிலைமையை மாற்றி அமைக்க வேண்டியது தேவையான ஒன்றாகும். தேவையற்ற சமுதாயத் தடைகள், அல்லது கட்டுப்பாடுகள் அர்த்தமற்ற பழக்கவழக்கங்கள், தவறான முறையில் அமைகின்ற தனிப்பட்டவர் உரிமைகள், சமுதா யத்தில் உள்ள ஏற்றத்தாழ்வுகள் போன்றவைகள் மறைய வேண்டும். இவை மனிதனின் சகோதரத்துவம் என்ற கனவை நினைவாக்கு வதில் மிக அதிகமாக உதவும்; பல சமயம் சார்ந்த சமூக

பொருளாதாரப் பழக்கங்களை உதறித்தள்ள உதவும். மனித சமுதாயத்தின் கூட்டு வாழ்க்கையில் முடிந்த அளவு மிகக் குறைந்த கட்டுப்பாடுகளே இருத்தல் வேண்டும். மக்களுடைய நடைமுறை வாழ்வில் அரசன் குறுக்கீடு மிகவும் குறைவானதாக இருத்தல் வேண்டும். ஏ. ஹக்சிலி என்பவருடைய "ஏ பிரேவ் நியூ வேர்ல்டு" என்ற நாவல் மனத்தை மிகவும் கவரக்கூடியது; கற்பனை நிறைந்தது. ஆனால், அதனை முழுமையாகப் பார்க்கும்போது மனிதனுடைய தேவைகள் அனைத்தையும் ஒருசேர நிறைவு செய்யும் வழியில் இருந்தாலும் கூட்டு வாழ்க்கையினை அடைவதற்கான வழியைச் சுட்டிக் காட்டுகிறது. உலக மக்கள் வாழ்வு என்பது ஏறக் குறைய எந்திரமயமானதாகும், மேலும் அது பழமையான முறையிலிருந்து விலகிச் செல்லாத ஒன்றாகும். ஏனென்றால் மக்கள் தங்களுடைய புலனுகர்ச்சி தேவைகளில் அடிப்படையில் ஒரே இயல்பை உடையவர்கள். ஆனால், உலக சகோதரத்துவம் எங்கும் அழுத்தமாக ஒழுக்க சம்பந்தமான நெறிகளின் அடிப்படையில் அமைந்திருப்பதால் அது நிலையான தாகவும் கடவுளை உணர்த்தலுக்கும் அழைத்துச் செல்லும்.

## 4. கல்வியின் குறிக்கோள் அல்லது கோட்பாடு

ஜனநாயகம், கோட்பாடு, சமதர்மம் போலவே கல்வியின் சிறப்புத் தகுதிகளை மிகச் சரியாகவும் தெளிவாகவும் வரையறுப்பது மிகவும் கடினமாகும். ஏனென்றால், இது, இத்தகைய சொற்களுக்கு அப்பதத்தின் மையக்கருத்தை மட்டுமே நாம் மிகச் சிரமத்துடன் கொடுக்க முடியும். கல்வி என்ற பதம் கல்லுதல் என்ற பதத்திலிருந்து வந்தது. அப் பதம் வெளிப்படுத்தும் என்ற பொருளைத்தரும். இவ்வாறு கல்வி மனிதனில் அடங்கியுள்ள நல்லவைகளையும் சிறப்பானவைகளையும் வெளிப்படுத்தும் முறையால் கூறப்படுகிறது. கல்வி எல்லா நாடுகளிலும் குழந்தைகளுக்கும் குறிப்பிட்ட வயதுக்குக் கீழுள்ள முதியவருக்கும் போதிக்கப்படுகிறது. இவ்வாறு அது, ஒரு பொதுவான நிகழ்ச்சி ஆகிறது. ஆனால் போதிக்கப்படுகின்ற கல்வி, அதன் நோக்கம், அதன் சாரம் இவற்றில் வேறுபடுகின்றன. நமது குழந்தைகளுக்குக் கொடுக்கப்படுகின்ற கல்வி பல்வேறு வகையான காரணங்களுக்காக விமர்சிக்கப்படுகிறது. வாழ்க்கைக்கு எவ்விதத்திலும் தொடர்பு கொள்ளாத சில உண்மைகளை மனப்பாடம் செய்கின்ற வகையில் ஏட்டுக் கல்வியாக அமைந்துள்ளது என்ற குற்றச் சாட்டு கொடுக்கப்படுகிறது. மேலும், இஃது உடல், ஆன்மா இவற்றின் இழப்பில் மனத்தை மட்டுமே வளர்க்கின்ற வகையில் உள்ளதாகும். சரித்திரம், சமூகம், சமயம் ஆகியவை போன்ற

பல காரணங்கள் நம்முடைய கல்விமுறை பயன்படும் தன்மையைப் பலனற்றதாக்குகின்றன.

## கல்வியின் நோக்கங்கள் எவை ?

கல்வி ஆராய்ச்சி ஆய்வாளர்கள் கல்வியின் நோக்கங்களில் பலவற்றை விரிவான முறையில் விவாதித்திருக்கின்றனர். அவற்றை நாம் சுருக்கமாகக் குறிப்பிடலாம். வயிற்றுப்பாட்டிற்கான அல்லது வாழ்க்கை நடத்துவதற்கான நோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட கல்வி நெடுங்காலமாகவே இருந்து வருகிறது. ஒரு மாணவன் தன்னுடைய வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்கான ஒரு வேலையினைப் படிப்பிலிருந்து வெளியேறியவுடன் பெறுவதற்கு உதவி புரியும் வகையில் இருப்பதே கல்வியின் ஒரே நோக்கம் என்று கூறப்பட்டது. இந்த நோக்கம் நிச்சயமாகச் சிறிது அழுத்தமானதே. ஏனென்றால் ஒருவனுடைய வாழ்க்கையின் பொருளாதாரத் தேவைகளைப் பெறுவதற்கு, உதவி செய்யாதிருந்தால், அத்தகைய கல்வியால் எந்தப் பயனும் இல்லையென்று வாதிக்கப்படலாம். நம் வாழ்வின் குறைந்த பட்ச தேவைகள் நிறைவு செய்யப்படாவிட்டால் வாழ்வின் உயர்லட்சியங்கள் பற்றிய பேச்சுக்கள் எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்காகப் பயனற்றுப் போகும். இக் கருத்து மிக முக்கியமானதாகத் தோன்றிய போதிலும் நமது அடிப்படை தேவைகள் முதலில் நிறைவு செய்யப்பட வேண்டும் என்பதை நாம் மறுக்க முடியாது. இத்தகைய வாழ்வியல் கல்வியின் நோக்கத்திற்கு எதிராகக் கல்வியின் நோக்கம் தனி மனிதனுடைய கலாச்சார வளர்ச்சியாக அமைதலே என்று பல சிந்தனையாளர்கள் கூறுகின்றனர். நமக்குக் கல்வியிலிருந்து இம்மைக்குரிய பலன்கள் ஏதேனும் கிடைக்கலாம்; கிடைக்காமல் இருக்கலாம். ஆனால் இத்தகைய அறிவு மாணவர்களுக்குப் பண்பட்ட நடைமுறைப் பழக்கங்களையும், மரியாதைகளையும் அளிப்பதால் சிறப்புடையதாகிறது. தடையற்ற கல்வியின் முடிவு நிலை என்பது கலாச்சார வளர்ச்சியே ஆகும். ஒரு கனவானை விவரிக்கும் பொழுது கார்டினல் நியூமேன் தம் மனதில் இத்தகைய கருத்தினையே தெளிவாக வைத்திருந்தார். அவர் தமது "ஒரு பல்கலைக் கழகத்தைப்பற்றிய கருத்து" என்ற நூலில் "இத்தகைய கலாச்சார அறிவு தரும் கல்வி கற்பித்துக்கூறுவது எல்லாம் சுதந்தரம், சமநிலை அடைதல், அமைதி, நடுநிலைமை, ஞானம் போன்றவை அல்லது நான் எதை என்னுடைய முந்திய பிரசங்கத்தில் 'தத்துவார்த்தப் பழக்கம்' என்று விவரித்தேனோ அவைகளே ஆகும்" என்று கூறியுள்ளார். கலாச்சார மதிப்புகளைப் பற்றி போதிப்பவர்கள், ஒரு மனிதன் படிப்படியாகப் பிறரிடம் மதிப்புடனும் மரியாதையுடனும்

நடந்து சிறிது சிறிதாகப் பண்பாடுடையவனாகிறான். அதற்குக் காரணம் அவனை அறிவாற்றலுள்ள வேலையில் ஈடுபடுத்தப் படுவதே என்று நம்புகிறார்கள். ஆனால், அது சரியானதன்று. ஏனெனில் பல கல்வியாளர்கள் குறிப்பிட்டிருப்பதுபோல, தனிமனித குலத்தைச் சிறப்புறச்செய்யும் பண்பாடு, கலாச்சாரம் என்பதிலிருந்து, வெறும் அறிவாற்றல் வேறுபட்டதாயுள்ளது. டாக்டர் எஸ். இராதா கிருஷ்ணன் தமது "சுதந்திரமும் கலாச்சாரமும்" என்ற நூலில் "ஒரு மனிதனது கலாச்சாரம், பண்பாடு என்பது அவன் எந்த அளவு ஒழுக்கப்படுத்தப்பட்டு, வகைப்படுத்தப்பட்ட விஷயங்களை அறிந்து, தன் ஆளுகையில் வைத்திருக்கிறான் என்பதன் மூலம் தீர்மானிக்கப்படுவதில்லை. ஆனால் அவன் எது வாழ்க்கையின் உண்மைகளைப்பற்றி அறிந்து கொள்ளும் பாங்கினைத்தருகிறதோ அத்தகைய உளப்பாங்கைப் - மனத்திறத்தைப் பெற்றிருப்பதன் மூலமே தீர்மானிக்கலாம்" என்று கூறியுள்ளார். காந்தியடிகளும் கல்வியின் கலாச்சார நோக்கத்தை மிக முக்கியமானதாகவே கருது கிறார். ஆனால், அதே சமயம், பண்பாடு என்பது அறிவு சார்ந்த வேலைகளினால் ஏற்படுவதன்று என்ற கருத்தையும் கொண்டிருந் தார்.

நமது உணர்வுகள், தன்மைகளை முழுமைப்படுத்துவதே கல்வியின் மூன்றாவது நோக்கமாகும். கல்வியின் நோக்கம் எல்லாச் சக்திகளின் ஒருங்கிணைந்த வளர்ச்சியினை உருவாக்கு வதேயாகும். நம் உள்ளுணர்வுகள், துடிப்புகள், நம்முடன் தோன்றிய மனப்பாங்கு, ஒழுங்கு, அமைதி, போன்ற பண்புகளைத் தனி மனிதனிடம் முழுமையாக ஒருங்கிணையச் செய்யும் வகையில் அவற்றை வளர்த்திருத்தல் வேண்டும் கல்வியின் வேலையாவது நமது உள்ளார்ந்த குணவியல்புகள் அனைத்தையும் ஒருங் கிணைத்த முழுமையான ஒன்றாக வளர்ப்பதேயாகும். நமது உள்ளார்ந்த தன்மைகள் உடல் சார்ந்தவை, அறிவு சார்ந்தவை, ஒழுக்கம் சார்ந்தவை மற்றும் ஆன்மநிலை சார்ந்தவை எனச் சித்தரிக்கப்படுகின்றன. எல்லா அம்சங்களும் அவற்றின் உச்ச நிலையில் தேர்ச்சியடையச் செய்தல் வேண்டும். அவற்றில் மிகச் சிறப்பானவைகளை வெளிக்கொணர்தல் வேண்டும். உடல் வளர்ச்சியும், உள்ள வளர்ச்சியும் ஒன்றோடொன்று இணைந்து செல்லுதல் வேண்டும். இவற்றோடு, ஒழுக்க நெறியை உள்ள டக்கிய பண்பாட்டு உணர்வையும் சேர்த்திடுதல் வேண்டும். உண்மையுணர்வு, நல்ல மனநிலை, கடமையுனர்வு, கடமையின்பாற் கொண்ட பக்தி போன்ற நல்லியல்புகளின் வளர்ச்சியினைப்பணிவும் பக்தியும் வணக்கமும் நிறைந்த தன்மை, குணநலன்களின் தூய்மை போன்ற அடிப்படைத் தன்மைகளின் வளர்ச்சி

ஆகியவை தொடருதல் வேண்டும். ஹெர்பர்ட் என்பவர் "நீதி முறை நல்லொழுக்கமே கல்வியின் தலையாய நோக்கமாகும்" என்றுரைக்கிறார். சிறப்பியல்பை உருவாக்குவதே கல்வியின் தலையாய நோக்கம் என்று கூறுவதும் முன்பு கூறியதும் ஒரே கருத்தாகும். காந்திஜி தன் சுய சரிதையில், "நான் மனத்தின் பண்படும் நிலை அல்லது சிறப்பியல்பை உருவாக்குவதற்குமே முதலிடம் கொடுத்துள்ளேன்" என்று கூறுகிறார்.

சரியானவை அல்லது நல்லவாழ்வு என்பதையே காந்திஜி சிறப்பியல்பின் முக்கியமான பகுதி என்று கருதுகிறார். அதை வளர்ப்பதே கல்வியின் நோக்கமாக இருத்தல் வேண்டும். இத்தனை நோக்கங்களில் எது சரியான ஒன்று என்பதே இப்பொழுது தோன்றியுள்ள கேள்வியாகும். இந்த நோக்கங்களில் எந்த ஒன்றையும் தனியாகப் பார்த்தால் அது முழுமையானதாகவும் திருப்திதரக் கூடியதாகவும் எதுவுமே இராது. இவையனைத்தும் ஏதாவதொரு கல்வி முறையில் இடம் பெற்றிருக்க வேண்டும். சிறப்பியல்பு அல்லது நீதிநெறி வளர்ச்சி என்பது வெறுமையில் ஏற்படுத்த முடியாது." எனவே, பொருளாதார நோக்கமும், கல்வித் திட்டத்தில் இடம் பெறுதல் வேண்டும் ஆனால், நீதி நெறி வளர்ச்சி அல்லது சிறப்பியல்புகள் கொண்ட குணாதிசயம் சேர்ந்திராத பொருளாதார நோக்கமுடைய கல்வி நம்மை நெறி தவறி அழைத்துச் செல்லவும் கூடும். மேலும் நாட்டைத் துண்டாடத்தக்க வகையில் தவறான நெறிகளில் இட்டுச் செல்லும். ஒப்புமைப்படுத்திக் கூறப்போனால், நமது உள்ளார்ந்து எழும் ஒழுங்கமைதியையும், சிறப்பியல்புகளையும் வளர்த்தலுமே மற்றெல்லா நோக்கங்களையும் விட மிக முக்கியமான தொன்று என்று கூறலாம். மற்றவைகளை நீக்கி எந்த நோக்கமும் தாமாக நாடுவதில்லை. ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை மட்டும் நாம் பின்பற்றக் கூடாது.

கல்வியினைப்பற்றிய விவாதங்களின் முடிவுகளை இங்குத் தொகுத்துக் கூறலாம். மனித சமுதாயத்திற்கு ஒரு முறையான கல்வித் திட்டம் மிகவும் தேவையானதாகும். ஏனெனில் இது, இல்லாவிடில் மனிதனுக்கும், மிருகத்திற்கும் உள்ள வேறுபாடு அதிகமிராது. மனிதருள் இருக்கும் திறமைகளையும், தன்மைகளையும் மிகச் சிறப்பான முறையில் வளர்ப்பதுடன், நமது இயற்கையுடனும், சமூகச் சூழ்நிலையினைப்பற்றிய அறிவை இத்துடன் சேர்ப்பதும் மிக முக்கியமானது. ஒருவன் பெறும் கல்விப் பயிற்சியும், மேற்கொள்ளும் ஒழுக்க நெறியுமே கல்வி என வரையறுத்துக் கூறலாம்.

மனித இனத்திற்கான கல்வி என்பது குறிப்பிட்ட கருத்தினின்றும் பெறப்பட்டதாகும் இது கல்வி போதிக்கும் ஆசிரியரின் வேலையாகும். நெடுங்காலமாகவே யோகிகளாலும், முனிவர்களாலும் நிலையான உண்மை எனப் போதிக்கப் பட்டவைகளைப் பொறுத்து வாழ்க்கை முறையை ஒழுங்கு செயல்தல் வேண்டும். அதையே தற்கால நிலைகளுக்குப் பொருத்தமாகவும் சரி செய்தல் வேண்டும். இந்த வழி ஒன்றே, அணுவியற் கருவிகளால் மனித நாகரிகத்திற்கு அழிவு ஏற்படும் நிலையுண்டு என்ற பயத்திற்கும், மற்ற முரண்பட்ட மதிப்புகளுக்கும், தற்காலக் குழப்பங்களுக்கும் முடிவு ஏற்படுத்தும் வழியாகும். மனிதகுல வாழ்வின் அடிப்படை மதிப்புக்களை மீண்டும் மீண்டும் வலியுறுத்தல் அவசியம். இதுவும் ஆசிரியரின் வேலை ஆகும்.

கல்வியின் நடைமுறைப் பழக்கத்தில் அல்லது அம்சத்தில் எந்தவித சித்தாந்தமும் தேவையில்லாதிருந்தபோதிலும், கல்வியியங்கும் முறை, அதன் கோட்பாடுகள், அடிப்படையில் மிகக் கவனமான சிந்தனையும், ஆழ்ந்த யோசனையும் அவசியமாகின்றன; தேவைப்படுகின்றன. நாம் மேலே கூறிய கல்வியின் அனைத்து நோக்கங்களும் தேவையானவைகளே. மற்றவைகளை முற்றிலும் நீக்கி, ஏதேனும் ஒரு நோக்கத்தை மட்டும் வலியுறுத்துதல் முடியாததாகும், உண்மையான கல்விமுறை என்பது, மாணவரின் பிற்கால வாழ்க்கைக்குத் தேவையான வசதிகள் அனைத்தையும் போதுமான அளவிற்கு உண்டாக்க வேண்டிய நிலையை மாணவரிடம் உருவாக்குதலேயாகும். அதே நேரத்தில், உணவு மட்டுமே மனிதனை வாழ வைக்க முடியாது என்பதனால், கல்வி, மாணவரிடம் உள்ள உள்ளார்ந்த ஒழுக்க நெறி, ஆன்மீக நெறி போன்ற அம்சங்களையும் வளர்த்திடுதல் வேண்டும். வாழ்தலின் உன்னத நிலையையும், அதற்கேற்ற சமூகவாழ்வு முறையையும் நோக்கி ஆரோக்கியமான முறையில் மாணவர்களை வளர்க்கக்கூடிய சமுதாய நிறுவனங்களும் அவசியம். இவ்வாறு, நடைமுறையில் ஆராயப் புகுந்தால் கல்வி என்பது பல நோக்கங்கள் கொண்டதாகவும் அமைகின்றன. இத்தகைய பல நிலைகளின் தீர்க்கமான அறிவு என்பதும் மிகவும் முக்கியமானது. அதே சமயம், கல்வியின் நோக்கமும், அதைச் செயல்படுத்தும் முறையும் நமது பழக்க வழக்கங்களுக்கும் கலாச்சாரத்திற்கும், உளப்பாங்கிற்கும் வேறுபட்டனவாக அமையக்கூடாது.

கல்வி, தீர்வு காண முடியாதபடி மக்களின் சமுதாய நிலைகளுடனும், அவர்களின் பொருளாதார நிலைகளுடனும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து உள்ளமையினால் குழந்தைகளின்

கல்வியானது மிகவும் முதன்மையான கவனம் பெற வேண்டும். பொதுவான ஆரம்பக் கல்வி, முதுநிலைக் கல்வி அல்லது முதியோர் கல்வி. தொடர் கல்வி போன்ற சிலவகைக் கல்வி தற்போதைய மிகவும் முக்கியமான பிரச்சனைகளாகவுள்ளன. இவையெல்லாம், சமுதாய பொருளாதார மற்றும் கலாச்சார கவனத்துடன் குறிக்கப்பட வேண்டுவதுடன், அவையடங்கிய கல்வித் திட்டங்கள் வகுக்கப்பட வேண்டும்.

## 5. அறிவியல், நீதிநெறி, சமயம் பற்றிய கண்ணோட்டம்

அறிவியல் என்பது என்ன? சில குறிப்பிட்ட இயற்கைப் பிரிவின் சரியான, விரிவான விசாரணையும், தொகுப்புமே அறிவியல் என்பதாகும். அறிவியல் என்பது புரிந்து கொள்ளும் வகையில் உண்மைகளை விவரிப்பது மட்டுமல்லாமல். அவற்றை விளக்க முயல்வதுமாகும். இயற்கை எவ்விதம் இயங்குகிறது என்பதனைப் பற்றிய தெள்ளத் தெளிந்த அறிவினைப் பெறுதல்-பல்வேறு சூழல்களில்-நிலைகளில் என்னென்ன காரண காரியத் தொடர்புகள் போன்றவைகளை அறிதல், முடிவில் அவற்றை விளக்கத் தேவையான விதிகளைப் பெறுதல் போன்றவையே அறிவியலின் நோக்கம் ஆகும். நாம் இயற்கையைப் பல எண்ணிறந்த பகுதிகளாக எப்படிப் பிரிக்க முடியுமோ அதுபோல அறிவியலின் பிரிவுகளும் மிக அதிகமாகக் கொண்டுள்ளோம். அறிவியல் ஆராய்ச்சியாளர்களின் முடிவான நோக்கம் என்னவெனில், இயற்கையின் செயல்முறைகளைப் கட்டுப்படுத்தவும், அவற்றை மாற்றியமைக்கவும், பின்வரும் விளைவுகளை, தாம் பெற்ற அறிவின் அடிப்படையில் முன்கூட்டியே தெரிவிக்க வேண்டும் என்பதே ஆகும். நீரின் விநோதமான தன்மைகள், மணல் முதலியவைகளை அறிந்து கொள்வதன் மூலம் கடல் பரப்பில் அடங்கியுள்ள வாயுக்களை முன்னறிவிப்புசெய்தல் இதற்கு ஓர் எடுத்துக் காட்டு ஆகும். இந்த உலகம் அறிவியலையே பொருளாகக் கொண்டிருக்கும்போது, அறிவியல் அதுபற்றிய கருத்துக்களை—விபரங்களைக் சேகரிக்கப் பல குறிப்பிட்ட வழிகளையும், முறைகளையும் பெற்றுள்ளது. இந்த முறையே அறிவியல் முறையாகும். அடிப்படை முறைகள் என்பவை: உற்று நோக்கலும், ஆய்வுகளின் மூலம் அறிதலுமேயாகும். ஆனால் கருவிகள் அல்லது சாதனங்களின் துணையின்றிப் புலன்களால் உற்றுநோக்கியறியும் தன்மை பல தவறான முடிவுகளுக்கு அழைத்துச் செல்வதால், அறிவியலறிஞர்கள் தொலைநோக்கி போன்ற கருவிகளைப் பயன்படுத்திப் புலன்களுக்குத் துணை செய்கின்றனர். புலனறிவால்

ஏற்படும் கருத்துக்கள் அல்லது உண்மைகள் கற்கள் என்றால், தாக்கம், பிரித்தறியும் முறை, ஆய்வின் முடிவுகள், தருவித்தல், விளக்குதல் போன்ற முறைகள் நல்ல சிற்பம் போன்றவை.

அறிவியல் ஒரு தனிப்பட்ட உண்மைகளை விளக்கும் விதிகள் எந்த உண்மையை வெளியிடுகின்றனவோ, அத்தனிப்பட்ட விதிகள் எல்லாமே மிகவும் உணர்வாற்றல் செறிந்த விதிகளின் அடிப்படையில் விளக்கப்படுகின்றன. ஆனால், அறிவியல் விளக்கத்தில் எதுவுமே முடிவான, இறுதியான, திட்டமானவை என்று இருக்க முடியாது. ஏனெனில் காலம் செல்லச் செல்ல, புதிய உண்மைகள், தேவைப்பட்ட புதிய விளக்கத்துடன் நம்முடைய கவனத்திற்கு வரும். அவை சில நேரங்களில் சில நிகழ்ச்சிகளைப்பற்றி நாம் முன்பு அறிந்து வைத்திருக்கும் கருத்துக்களை தேவையான அளவு மாற்றிக் கொள்ளுமாறும் செய்கின்றன.

சமீபத்தில், அறிவியல் கோட்பாடுகள் எல்லாம் விரிவான வியாக்கியானங்கள் அல்ல; அவை விளக்கங்களே, அல்லது வர்ணனைகளே என்னும் கருத்து முன்வைக்கப்பட்டுள்ளது. விளக்கிக் கூறுதல் என்பது தத்துவத்தின் இயக்கம் பற்றியதாகும்.

## நன்னடத்தை

மனித குலம், இயற்கையில் உள்ள உண்மைகளை மனத்தால் உணர்ந்து அறிவதுடன் மட்டுமல்லாமல், அவற்றின் இயல் நிகழ்ச்சிகளுக்கு அறிவார்ந்த விளக்கமான கோட்பாடுகளை உருவாக்கவும் முனைகின்றது. அவர்கள் இயற்கையின் இயல் நிகழ்ச்சிக்கேற்றவாறும் தன்னுடனிருக்கும் மக்களுக்கும் ஏற்றவாறும் அதற்கு எதிராகவும் செயல்படுகின்றனர். உளவியல், காரண காரியத் தொடர்பின் அடிப்படையில் நமது நடத்தையினை விவரிக்கின்றது. ஆனால், அஃது எவ்வழியிலும் அவர்களின் நன்மையையோ, தீமைகளையோ விவாதிப்பதில்லை. நமது நடத்தை சமுதாயத்துடனும், சகாக்களுடனும் கொண்ட உறவினடிப்படையில் மிகவும் சிக்கலானதாகிறது. எவ்வளவு தூரம் ஒரு செயல் நல்லது அல்லது சரியானது என்பதை அறியக்கூடிய நிலையில் நாம் இருக்க வேண்டும். வேறுவிதமாகக் கூறப் போனால் நமது செயல்கள் சரியானவையாகவோ, தவறானவையாகவோ, நல்லனவாகவோ, தீயனவாகவோ இருக்கலாம். எது சரியானது, நமது நடத்தையில் என்ன தவறு உள்ளது போன்ற கேள்விகள் மூலம் நம் நன்னடத்தையினைச் சோதித்தறிவதே

ஒழுக்கவியலின் பொருளாகும் நாம் எந்த அளவின் அல்லது தரத்தின் அடிப்படையில் ஒழுக்கநெறிகளையும், ஒழுக்கமற்றவைகளையும் வேறுபடுத்துகிறோம் ? நாம் எந்த அடிப்படையில் சில செயல்கள் நல்லவை என்றும், சில மோசமானவை என்றும் மதிப்பிடுகிறோம் ? இது சம்பந்தப்பட்ட சில கேள்விகள் ஒழுக்கவியலில் விவாதிக்கப் படுகின்றன.

நீதிபோதனைப் பற்றி சில எழுத்தாளர்கள் சில தரங்களை கீழ்க்கண்டவாறு கொடுத்துள்ளனர். நாம் தெளிவாகப் புரிந்துக் கொள்ள—முடியாததும் மனச்சாட்சி என்றும் எதை அழைக்கிறோமோ, அதையே சில எழுத்தாளர்கள் நன்னடத்தையின் தரம் எனக்கூறுகிறார்கள். ஆனால் இக் கருத்து குறையுள்ளது என்று அநேக எழுத்தாளர்கள் கருதுகிறார்கள். பெரும்பான்மையானவர்களின் இன்பவாழ்வே உண்மையான நன்னெறி; அல்லாதவை தீயொழுக்கம் என்று தீர்மானிக்கச் சிறந்ததென்று கருதுகிறார்கள். ஆனால், இதுவும் திருப்திகரமானது அன்று. ஏனெனில் மகிழ்ச்சி என்பது மிகவும் தெளிவற்றதாகவும், சுருக்கமாகக் கூற வியலாததுமான ஒரு பதம். மனித குலத்தின் நோக்கம் முழுமையை அடைவதாக இருப்பதால், எல்லா நன்னெறிச் செயல்களும், எவ்வளவு தூரம் நன்னெறிச் செயல்கள், நமக்கு பூரணத்துவத்தைத் தருகின்றனர் என்பதைக் குறித்தே, அச் செயல்கள் தீர்மானிக்கப்படுகின்றன என்று சிலர் சாதிக்கின்றனர். ஆனால் அந்த அளவீடு கூட தவறானதாகவே கருதப்படுகிறது. சிந்தனையாளர்களில் ஒரு பகுதியாளர் சமயத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட எல்லாச் செயல்களும் சரியானதென்று கருதுகின்றனர். ஆனால் இக்கருத்து நம்மை சான்றுரிமையற்ற தெய்வீக நடவடிக்கைகள் நோக்கி இழுத்துச் செல்லக்கூடியது. எனவே இந்தப் பொருளில் ஒத்த கருத்தொன்று இருக்க முடியாது பெரும்பாலான எண்ணிக்கையுள்ள இந்திய எழுத்தாளர்கள் பகவத் கீதையிலிருந்து கொடுக்கப்பட்ட கருத்துகளை நீதிநெறிக் கருத்துகள் எனப் போற்றுகிறார்கள். நமது செயல்களின் நன்னெறி முறையை அவை ஏற்படுத்துகிறனவென்றும் உறுதி செய்கின்றனர்.

இந்தக் கேள்விக்கு இந்து மத ஆன்மீக அணுகுமுறை வேறுபட்டது ; அதன் நோக்கம், மேல்நாட்டு ஆன்மீகக் கோட்பாடுகளை விட மிகவும் உணர்வாற்றல் சார்ந்த தொன்றாகும். இந்தியாவில், நீதிநெறி பற்றிய விவாதம், தத்துவத்தையும், சமயத்தையும் நோக்கி நம்மை அழைத்துச் செல்கிறது. ஒருவனுடைய செய்கை அல்லது நடத்தை சடங்குகளையும், நன்னெறிச் செயல்களையும் அடக்கிக் கொண்டிருக்கும் 'கர்மா' என்ற

சொல்லால் விவரிக்கப்படுகிறது. ஒரு மனிதனின் முடிவான நோக்கம் என்பது அவன் பெறவேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்பவையாகும். அவை முறையே நன்னெறியில் நடந்து நல்லவனாயிருத்தல், தேவைக்குரிய பொருள் சேர்த்தல், நமது உரிமையுள்ள ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளுதல், இறுதியாக சுதந்தரத்தை உணர்தலான நன்னெறியில் நடத்தல் ஆகியவை அறத்தினை வீடு பெறுதலுக்குரிய வழிமுறையாகக் கொள்ளலாம். இறுதியில் கடவுளை உணர்த்துவது நன்னெறியாகும்.

கர்மா பற்றிய விதிகள் நன்னடத்தையையும், ஆன்மீக அடிப்படை நிலையையும் இயக்குகிறது. அதே நேரத்தில் காரண காரியத் தொடர்பான நிலைகளை இயக்குகிறது.

## சமயம்

சமயம் என்பது படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலை செய்து வருவதும் மனிதர்கள் அனைவரும் பக்தி செய்யவும், ஆராதிக்கவும் தக்கதுமான மிக உயர்ந்த உன்னதமான சக்தியினை முதன்மையாக அறிந்துணர வைப்பதேயாகும். நவீன சமயங்களில் கடவுள் பற்றிய கொள்கை மிகவும் பண்பட்டதாக இருக்கிறது. கணக்கிலடங்கா நற்குணங்களால், குறிப்பாக இரக்கம், மன்னிக்கும் மனப்பாங்கு போன்றவை தெய்வத்தன்மைகளாகும். ஒரே கடவுள் நம்பிக்கையுடைய சமயத்தினர், கடவுளைக் கருணைக் கடல் என்று கருதுகின்றார்கள். எனவே, பக்தி அல்லது கடவுள் பற்று என்பது சாத்தியமாகிறது. சமயத்தால் போதிக்கப்படுகின்ற நோக்கம் என்பது கடவுளை அறிவதேயாகும். அது கடவுளால் போதிக்கப்பட்ட நெறிவழி உண்மையுடன் நடந்து, அதனை நிறைவேற்றும் பொழுது நமக்கு எளியதாகிறது. உயர்ந்த உள்ளங் கொண்ட யோகிகளும், முனிவர்களும் அனைத்துப் பொருள்களையும், படைப்புக்களையும் இறைவனின் சாயலாகவே கருதுகின்றனர். ''எதிலிருந்து தோன்றி, எதனுதவியால் வாழ்ந்து வளர்ந்து, எதில் இறப்புக்குப்பின் கலக்கிறோமோ அதை அறிந்துகொள்ள முயற்சி செய். அதுவே பிரம்மம்'' என்று அறிந்து உபநிடதம் ஒன்று கூறுவதாலேயே முனிவர்கள் இவ்வாறு கருதுகிறார்கள். ''படைப்புக்களை உண்டாக்கிய பின்! அவன் அவைகளில் புகுகிறான் என்றும் இயற்கையாய் அடைந்திருக்கின்றன. இத்தகைய கூற்றுகள் இறைவன் மனித அளவிற்கு அப்பாற்பட்டவனல்ல என்றும் இயற்கையாய் அடைந்திருக்கின்றவனல்ல என்றும் மறைமுகமாகச் சுட்டுகின்றன. சமயத்தில் ஒரே கடவுள் என்ற கோட்பாடு கொண்ட வகுப்பினர் மட்டுமே உள்ளனர் என்ற நிலை இல்லாதிருந்த போதிலும், கடவுள் முழு

முதற் பொருள், அவருக்கு உருவம் இல்லை, அவருடைய குணங்கள் மனித அறிவுக்கு அப்பாற்பட்டது என்று கூறும் பிற வகுப்பினர்கள் இருந்த போதிலும், அக் கொள்கை ஏட்டளவிலே எளிமையாக இருந்தாலும், கடவுள் வழிபாட்டு முறையில் உருவ முடைய கடவுளே பக்தர்களுக்கு எளிதாக உள்ளது

மதத்தின் தன்மைகளைத் தொகுத்து அறிவது எளிதாக உள்ளன. அறிவியலின் சூழலில் நாம் கடவுளின் படைப்பையும், அவை எவ்வாறு செயல்படுகின்றதென்பதையும் அறிய வேண்டும். ஒருவன் இதுபற்றிய படிப்பினையில் தேர்ச்சி பெற விரும்பினாலன்றி, இது தேவையற்றன மட்டுமல்லாமல் நடைமுறைக்கொவ்வாததுமாகும். புலனுணர்வுடைய அறிவியல் இயற்கை பற்றிய அறிவியல், கடவுளால் அளிக்கப்பட்ட தன்மைகளுக்கும், ஒருவனின் நம்பிக்கை பெற்ற மத சம்பந்தமான இலக்கியங்கள் பற்றிய அறிவாற்றலுக்கும் வடிகாலை காண்கின்றன. ஒருவன் இறைவன் மீது அன்பு செலுத்துவதற்கும், பக்தி செய்வதற்கும் முன்பு சில விதிகள் தேவைப்படுறன்றன

நன்னடத்தையின் சூழல், மனிதனின் துணிவாற்றலான செயல் அம்சத்தையுடையது. இங்கு அறிவைவிட செயலே அதிகமாக வலியுறுத்தப்படுகின்றது. ஒவ்வொரு மதமும் குறிப்பிட்ட நன்னடத்தை விதிமுறைகளையும், ஆன்மீக ஒழுக்க நிலையையும் குறிப்பிட்டுள்ளன. அதனை நிறைவேற்றுவதே பக்தர்களின் கடமையாகும். மற்றோர் இடத்தில் நாம் மேற்கோளாகக் காட்டிய ஆன்மீக ஒழுக்கங்கள், இங்கு வலியுறுத்தப்படுகின்றன. இவ்வாறு சமயத்தில், நன்னெறி ஒழுக்கமே மிகவும் முக்கியமான இடம் பெறுகிறன. தனிமனிதனை ஆளுமை என்ற மூன்றாவது அம்சம் பற்று அல்லது உணர்ச்சிகள் அல்லது உணர்ச்சி வேகம் என்பதாகும். இது கடவுளை உணர்வு பூர்வமாக, அணுகும் முறையாகும். இவ்வாறு சமயம் என்பது நன்னெறி, அறிவியல் ஆகியவற்றின் தொகுப்பாகும்.

